நெல்லை மாவட்டத்தில் கல்கி – 11

KALKI 22.2.87 ரூ. 1.50

# கல்கி

## பச்சையாறு அணையை எதிர்க்கும் வனத்துறை

கோத்ரெஜ்

# புதிய
# மேகா
## ஏ ஓ எஸ்* கொண்ட
## நீல டிடர்ஜென்ட் கட்டி

என்ன அருமையான சலவை !

நியாயத்திற்குப் போராடும் இந்தியாவின் நட்சத்திரம் ரஜனி
இப்போது மேகா மட்டுமே உபயோகிக்கிறார்.

MEGA

*ஏஓஎஸ், அதிக நுரையையும் அதிக சலவைத் திறனையும் தரும் அற்புதமான மூலப்பொருள்.

Mudra: B:GS 4223 TAM

# நாலாவது தமிழர்!



தில்லி மாநகரில் சிலையாக அமைந்துவிட்ட நாலாவது தமிழர் பாரதியார். ஏற்கெனவே ராஜாஜி, காமராஜர், திருவள்ளுவர் ஆகியோரின் சிலைகள் உள்ளன.

புது தில்லி லோதி ரோடு அருகே ஏற்கெனவே மகாகவி சுப்பிரமணிய பாரதி சாலை உள்ளது. அதனுடைய திருப்பத்தில் மகரிஷி ரமணர் ரோடு. அதன் முனையில் புதிதாய் எழுந்துள்ள பாரதி நகரில், பாரதியின் சிலை அமைந்துவிட்டது.

பிப்ரவரி 4—ஆம் தேதி 'டாண்' என்று பிரதமர் ராஜீவ் காந்தி காலை பதினொரு மணிக்கெல்லாம் வந்துவிட்டார். புன்னகை மாறாத வகையில் எம்.ஜி. ஆரை ஆதரவாக அணைத்தல், துண்டை வாங்கிப் போட்டுக் கொள்ளல், பேட்ஜ் குத்திக் கொள்ளல் போன்றவற்றோடு இரண்டு நிமிடம் அளவளாவல். இதற்குள் துணை ஜனாதிபதி ஆர்.வி.யின் படகுக் கார் உள்ளே வர, அவரும் எம்.ஜி. ஆரிடம், 'ஹௌ ஆர் யூ' என்று விசாரிக்க... மூவரும் மேடையில் அமர்ந்து கொள்ள, விழா தொடங்கியது.

எம்.ஜி. ஆர். ஏழு நிமிடத்திற்கு எழுதி வைத்துப் படித்தார். புரிய வேண்டும் என்பதற்காக அவர் உரை அச்சடிக்கப்பட்டு விநியோகிக்கப்பட்டிருந்தது. இடை இடையே அவர் குழந்தைபோல் தட்டுத் தடுமாறி மழலை பேசியபோது, கூடியிருந்த தமிழர்க்கெல்லாம் கண்ணீர் ததும்பிவிட்டது.

''பிப்ரவரி, நாலாம் தேதியை மறக்க முடியாது; இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், இதே நாளில்தான் சிகிச்சை பெற்றுத் தாயகம் திரும்பினேன்'' என்று சொல்லி இந்திரா காந்திக்கும், ராஜீவ் காந்திக்கும் நன்றி தெரிவித்துக் கொண்டார்.

துணை ஜனாதிபதி ஆர்.வி. வழக்கம்போல் ஆங்கிலத்தில் உரையாற்றினார். ''பாரதியின் பாடல்கள் எழுதப்பட்ட சூட்டோடு ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டிருந்தால், 'நோபல்' பரிசு பெற்றிருப்பார்'' என்றபோது, கரவொலி வானைப் பிளந்தது.

பிரதமர் ராஜீவ் காந்தி 'சுப்பிரமணிய பாரதிஜி'யின் கவித் திறனைக் குறிப்பிட்டுப் பாராட்டிப் பேசினார். 'சாதி இரண்டொழிய வேறில்லை' என்ற ஔவையாரையும், 'சாதிகள் இல்லையடி பாப்பா' என்ற பாரதியையும் அவர் போற்றினார்.

பத்தடி உயரமுள்ள பாரதியின் சிலையை வடிவமைத்த சென்னைச் சிற்பி கோ. மோகனதாஸுக்கும் தில்லிப் பொறியாளர் எம்.வி. கோர்காவுங்கருக்கும் வழக்கமான பொன்னாடைப் பரிசு!

தில்லித் தமிழ்ச் சங்கத்துக்கு அடித்தது யோகம். அதன் கட்டட நிதியாக ஐந்து லட்சம் ரூபாயை எம்.ஜி. ஆர். காசோலையாய்த் தர, தலைவர் இராமாமிருதம் பெருமையுடன் வாங்கிக் கொண்டார்.

## சிலை திறப்பு விழாவில் சிதறிய சில:

* எம்.ஜி. ஆருக்கு வலது கை வீக்கம் நன்றாகத் தெரிந்தது.
* வழக்கத்திற்கு மாறாக எம்.ஜி. ஆர். குறைந்த அளவு 'மேக்—அப்'புடன் விழாவுக்கு வந்திருந்தார்.
* எம்.ஜி. ஆர். பரிசாக அளித்த அர்த்தநாரீஸ்வரர் சிலையைப் பிரதமர் வியப்புடன் பார்த்து மகிழ்ந்தார்.
* வீர உணர்ச்சி இல்லாமல் பாரதியின் பாடல்களை மகாராஜபுரம் சந்தானம் பாடியதை ரசிக்க முடியவில்லை. பாடலின் அர்த்தபாவத்துக்கு ஏற்ப மெட்டு அமைக்க வேண்டாமோ? அதோடு ஒரு தலைசிறந்த நாதஸ்வர வித்வானை அழைத்து வராத தமிழக அரசை அதற்காகக் குறை கூறாமல் இருக்க முடியவில்லை.
* பாரதியின் கையில் ஒரு தடியைக் கொடுத்து அவரையும் வழக்கமான 'சிலைக் கிழவர்' போல இந்திக்காரர்களை நினைக்கச் செய்ததும் வருந்தத்தக்க விஷயமே.

— தில்லி ஜெயமகன்

படங்கள்: தில்லி செந்தில் கணேஷ் & குந்தன்லால்





# பச்சையாறு அணையை எதிர்க்கும் வனத்துறை!



• பச்சையாறு அணைக்காக அடிக்கல் நாட்டப்பட்ட இடத்திலிருந்து ஒரு பார்வை.....

• ராஜு



**ஒரு திட்டத்திற்குக் குறுக்கே நிற்கும் நிஜமான பிரச்னைகளை மறைத்துவிட்டுத் தங்கள் சுய லாபத்திற்காக, நமது அரசியல்வாதிகள் எப்படியெல்லாம் நாடகமாடுகிறார்கள் என்பதற்குப் பச்சையாறு அணைத் திட்டம் ஓர் உதாரணம்.**

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள நான்குநேரி தாலுகாவைக் கடந்த 72, 73 ஆகிய இரண்டு ஆண்டுகளிலும் வறட்சிப் பகுதியென்று நீர்ப்பாசனக் கமிஷன் அறிவித்தது. அதைப் போக்க, மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து ஓடி வந்து, வீணாகக் கடலில் கலக்கும் பச்சையாற்றின் குறுக்கே — களக்காடு வனப் பகுதியில் ஓர் அணை கட்டினால், அதன் மூலம் சுமார் பன்னிரண்டாயிரம் ஏக்கர் நிலப்பரப்புப் பாசன வசதி பெறும் என்று அந்த நீர்ப்பாசனக் கமிஷனே சிபாரிசும் செய்தது.

அதனால், கடந்த 75—ஆம் ஆண்டு இறுதியில் அப்போது முதல்வராயிருந்த மு. கருணாநிதி பச்சையாறு அணைக்கு அடிக்கல் நாட்டினார். அந்த அடிக்கல் நாட்டு விழாவில் அவர் பேசும்போது, "இந்தப் பச்சையாறு அணைத் திட்டம், நான்கு கோடியே ஐம்பத்தைந்து லட்சம் செலவில் போடப்பட்டுள்ள திட்டம். கருணாநிதி அடிக்கல் நாட்டுகிறான் என்றால், வேலை தொடங்குகிறது; லட்சியப் பணி முடியப் போகிறது என்று பொருள். இந்த அடிக்கல் பூஜை செய்வதற்காக நாட்டப்படும் கல் அல்ல...." என்று மிகவும் நம்பிக்கையோடு



• பிச்சைக்கனி

பேசியதால், அந்தப் பகுதி மக்கள் ஏராள மாக மகிழ்ந்து போயிருக்கிறார்கள்.

ஆனால், கருணாநிதி அடிக்கல் நாட்டிய சில மாதங்களிலேயே அவர் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டபோது, மீண்டும் அணை வருமா என்ற சந்தேகம் ஏற்பட்டுவிட்டது. அந்தச் சமயத்தில், அதாவது 76—ல் தமிழக வறட்சி நிலையைப் பார்வையிட வந்த அப்போதைய பிரதமர் இந்திராகாந்தி, களக்காடு பகுதிக்கு வந்தபோது, பச்சையாறு அணை கண்டிப் பாகச் சீக்கிரத்திலேயே கட்டப்பட்டு விடும் என்று உறுதியளித்திருக்கிறார். ஆனால், அதே சமயத்தில் களக்காடு வனப்பகுதியில் வசிக்கும் சிங்கவால் குரங்குகள் போன்ற அபூர்வ விலங்கினங்களைப் பாதுகாப்பதற்காக மத்திய அரசு, அதை வனவிலங்குச் சரணாலயமாக அறிவித்துவிட்டது. இந்நிலையில் அங்கு அணை கட்டினால், அது அந்த அபூர்வ விலங்கினங்களுக்கு இடைஞ்சலாக இருக்குமென்பதால், அணை கட்டும் திட்டமே ஓசையின்றிக் கைவிடப்பட்டு விட்டது. ஆனாலும் அணை கட்டப்படவிருப்பதோ அறுநூறு அடி உயரத்தில்; சிங்கவால் குரங்குகள் வசிப்பது மூவாயிரம் அடி உயரத்திற்கு மேல். எனவே, இந்த அணையால் அவை பாதிக்கப்படாது. மேலும் இந்த அணைக்கட்டின் மூலம் நாளொன்றுக்கு ஐம்பது கிலோவாட் நீர் மின்சாரமும் தயாரிக்க இயலும் என்று உள்ளூர் மக்களும் அரசியல்வாதிகளும் வலியுறுத்திக் கொண்டே இருந்தனர்.

இந்த நிலையில் கடந்த 84 ஆரம்பத்தில் நெல்லை மாவட்டத்தில் ஏற்பட்ட வெள்ளச் சேதத்தைப் பார்வையிட வந்த முதல்வர் எம்.ஜி. ஆர். பச்சையாறு அணை கட்டப் படாததற்கான காரணங்களை முற்றிலுமாக மறந்துவிட்டு, "கருணாநிதி பச்சையாறு அணையைக் கட்டியிருந்தால் நெல்லை மாவட்டத்தில் இத்தனை பெரும் வெள்ளச் சேதம் ஏற்பட்டிருக்காது" என்று பேச, அது பெரும் சர்ச்சையாகிவிட்டது. அதன் காரணமாக, மீண்டும் இந்தப் பச்சையாறு அணைத் திட்டம் ஏழாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப் பட்டு, விரைவில் கட்டப்பட்டுவிடுமென்று எம்.ஜி. ஆரே அறிவித்துவிட்டார். ஆனாலும் வேலை ஏதும் துவங்கப்படவில்லை. அதற்குக் காரணம் மத்திய அரசின் குறுக்கீடுதான் என்றும் மாநில அமைச்சர்கள் பிரசாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

இந்நிலையில் பச்சையாறு அணைத் திட்டத் திற்காகப் பெருமுயற்சி எடுத்துக் கொண் டிருந்த அந்தப் பகுதி எம்.பி.யான கே.டி.



• சிங்கவால் குரங்கு



• எஸ். ராதாகிருஷ்ணன்

கோசல்ராம் மறைந்துவிடவே இடைத் தேர்தல் வந்தது. அந்தத் தேர்தலில் இ.காங்கிரஸ் சார்பாகப் போட்டியிட்ட தனுஷ்கோடி ஆதித்தனை ஆதரித்துப் பொதுக்கூட்டத்தில் பேசிய கருப்பையா மூப்பனார், "பச்சை யாறு அணைத் திட்டத்திற்கு மத்திய அரசு தான் முட்டுக்கட்டை என்றால், அது பற்றி பிரதமரிடம் பேசிப் பச்சையாறு திட்டத் தைச் செயல்படுத்தச் செய்வேன்..." என்று மக்களிடம் உறுதிமொழி கொடுத்திருக் கிறார். அப்படியிருந்தும் திட்ட வேலைகள் ஏதும் துவங்கப்படவில்லை.

அண்மையில், தமது பதவி பறிபோவதற் குச் சில மாதங்கள் முன்பு களக்காடு சென் றிருந்த ஆர்.எம். வீரப்பன் பேசும்போது, "பச்சையாறு அணைத் திட்டத்தால் சிங்க வால் குரங்குகள் பாதிக்கப்படும் என்பதல்ல; அணைக்கட்டு வனப்பகுதிக்குள் அமையும்போது, வனப் பிரதேசம் அழிந்து விடுமென்று சம்பந்தப்பட்ட நிபுணர்கள்



''எங்கள் ஊரில் யாரும் மழைக்குக் கூட பள்ளிக்கூடத்தில் ஒதுங்கினதில்லே.''

''அத்தனை பேரும் படிக்காத முட்டாள்களா?''

''ஊஹூம்.பள்ளிக்கூடத்துக்குகூரையுமில்லே, சுவருமில்லேன்னு சொல்ல வந்தேன்.''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

---

கருதுகிறார்கள். அதுதான் காரணம். எப்படியிருந்தாலும் மத்திய அரசுடன் பேசி இத்திட்டத்தை மறுபரிசிலனை செய்வோம்...'' என்றிருக்கிறார். ஆயினும் இந்த நிமிஷம் வரை திட்டம் கிடப்பில்தான் போடப்பட்டிருக்கிறது.

இந்தத் திட்டத்திற்காகத் தமது சொந்தப் பணத்தைச் செலவழித்துக் கொண்டு எம்.பி.க்கள், எம்.எல்.ஏ.க்கள், அமைச்சர்கள் என்று பலரையும் பார்த்துப் பார்த்து வற்புறுத்தி வருகிற, களக்காட்டில் வசிக்கும் உள்ளூர்ப் பிரமுகரான ப. பிச்சைக்கனி என்பவரைச் சந்தித்தபோது, ''சார், சுமார் முந்நூறு நானூறு சிங்கவால் குரங்குகள் பாதிக்கப்படும்னுதான் பச்சையாறு திட்டத்தையே கைவிட்டுட்டாங்க. மனுஷனுங்க பாதிக்கப்படறதைப் பத்தி அவங்களுக்கு என்ன சார் கவலே? வனத்துறைல சொல்றாங்க.... அணை கட்டினால் பாரஸ்ட்டே அழிஞ்சுடும்னு! சுமார் 223 சதுர கிலோ மீட்டர்ல அமைஞ்சிருக்கிற இந்த பாரஸ்ட்ல நூத்திப் பத்தே ஏக்கர் நிலத்தை அணை கட்டக் குடுக்கிறதாலே எப்படிங்க சார் மொத்த பாரஸ்ட்டே அழிஞ்சிடும்? நீங்களே யோசிச்சுப் பாருங்க. நேர்ல போயும் பார்த்திட்டு எழுதுங்க...'' என்று ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்டுப் பேசினார்.

அவர் சொல்வதை நம்மால் ஒப்புக்கொள்ள முடியாவிட்டாலும், அவருடைய பேச்சில் — அந்த உணர்ச்சியில் இருந்து அந்தப் பகுதியின் பல்லாண்டு கால வறட்சியின் கொடுமையைப் புரிந்து கொள்ள முடிந்தது. உண்மையை அறிந்து கொள்வதற்காக அங்குள்ள வனச்சரக அலுவலரான எஸ். ராஜு என்பவரைச் சந்தித்துப் பேசினோம்.

''இப்போது அடிக்கல் நாட்டப்பட்டுள்ள இடத்தில் பச்சையாறு அணை கட்டுவதால், எனது சிங்கவால் குரங்குகள் அழிந்துவிடும் என்று நானும் சொல்லவில்லை. அதற்காகவும் நாங்கள் எதிர்ப்புக் காட்டவில்லை. ஆனால் வனப் பகுதியின் உள்ளே அணை கட்டப்படும்போது — அந்த நூற்றுப் பத்து ஏக்கருக்கும் மேலாகத் தண்ணீர் தேங்கும் பகுதியிலுள்ள எனது மரங்கள் என்னாகும்? பல நூறு ஆண்டுகளாக இருக்கும் அந்த எனது மரங்கள் நீரில்மூழ்கி அழிந்துபோகும். சில ஆண்டுகளில் அடர்த்தியாக இருக்கும் அந்த இடத்தில் ஒரு வெறுமையான இடம் தோன்றிவிடும். மேலும் சில ஆண்டுகளில் அந்த வெறுமையே மெள்ள மெள்ளப் படர ஆரம்பிக்கும்.

''இப்படி வனப் பகுதி அழிய ஆரம்பித்தால் என்னவாகும்? சுற்றுப்புறச் சூழலே மாறி மழை பொழிவதே நின்றுவிடும். பிறகு எப்படி அணைக்குத் தண்ணீர் கிடைக்கும்? பிறகு அந்த அணையே வீணாகிவிடுமல்லவா! அதனால்தான் எனது மரங்களுக்குப் பக்கத்தில் வராதீர்கள். அணையை வனப் பகுதிக்கு வெளியில் கட்டிக் கொள்ளுங்கள். அப்படிக் கட்டினால் காலகாலத்துக்கும் உங்களுக்குத் தண்ணீர் கிடைக்கும் என்கிறோம். அணையை வெளியில் தள்ளிக் கட்டுவதால், இப்போதுள்ள இடத்தில் கட்டுவதைவிட, மூன்று மடங்குச் செலவு அதிகரிக்கும் என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், அந்தச் செலவைவிட எனது மரங்கள் மிக மிக மேலானவை; விலை மதிக்க முடியாதவை. நாம் சுவாசிக்கும் காற்றைச் சுத்தப்படுத்தித் தருவதிலிருந்து, நமது அன்றாட வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகளில், எனது அந்தப் பச்சை மரங்கள் எத்தனை தோழமையோடு இரண்டறக் கலந்திருக்கிறது என்பதையெல்லாம் விஞ்ஞான நோக்கோடு எதிர்காலத்தைச் சிந்தித்துப் பார்த்தால்தான் புரியும்....

''ஆனாலும் நான் ஒருநாள் இந்த இடத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்றப்படலாம். அப்போது, இன்று அடிக்கல் நாட்டப்பட்டிருக்கும் இடத்திலேயே அணையும் கட்டப்படலாம். எனது மரங்களும் அழிந்து போக ஆரம்பிக்கலாம். அப்படியொரு நிலை வருமாயின், எனது மரங்களின் அழிவு ஏற்படுத்துகிற கொடூரம், நம்மைப் பாதிக்காமல் போகலாமென்றாலும் நமது எதிர்காலச் சந்ததியினரைக், கடுமையாகப் பாதிக்காமல் இருக்க முடியாது என்பதை மட்டும் சொல்லிக் கொள்கிறேன்....'' என்றார் வனச்சரக அலுவலர் எஸ். ராஜு.

மனிதர்களுக்கிடையிலான உறவுகளே அந்நியப்பட்டுக் கொண்டு வருகிற இந்தக் கலியுகத்தில், வார்த்தைக்கு வார்த்தை, 'எனது மரங்கள்; எனது மரங்கள்' என்று இயற்கையோடு உறவு கொண்டாடும் ராஜுவின் பேச்சு நம்மை நெகிழச் செய்துவிட்டது. 'நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்று வள்ளுவர் சொன்னது, இப்படிப்பட்ட ஒரு சில வனத்துறை அதிகாரிகளாவது, இயற்கையின் தோழமையை உணர்ந்து செயல்படுவதால்தான், மிச்சம் மீதியிருக்கிற வனப் பகுதிகள் காப்பாற்றப்பட்டு மழை பொழிகிறது என்ற அர்த்தத்தில்தானோ!

சரி, வனத்துறை அலுவலர் ராஜு சொல்வது போல, மூன்று மடங்குச் செலவைப்

உ

ஸ்ரீ ரஸ்து சுபமஸ்து ஸ்ரீவெங்கடேசப்ரசன்ன
ஜெகத்குரு ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஆசியுடன் —

18.4.1987—ல் பத்து நாட்கள் கொண்ட துவாரகை, சோமநாதபுரம் முதலிய செளராஷ்ட்ர தேச யாத்திரை புறப்படுகிறது. எல்லா செலவுகளும் உள்பட நபர் ஒன்றுக்கு ரூ 1000/—.

30.4.87—ல் 35 நாட்கள் கொண்ட பத்ரிநாத், கேதார்நாத் உள்ளிட்ட சம்பூர்ண வடதேச ப்ரதக்ஷிண யாத்திரை, 'நகரும் மாளிகை' என வழங்கும் C.T.S. ரயில் பெட்டியில் புறப்படுகிறது. நபர் ஒன்றுக்கு ரூ 3200/—. ஊர் சுற்றிப் பார்க்கும் பஸ் முதலிய செலவுகள் தனி.

10.5.87—ல் 12 நாட்கள் கொண்ட பத்ரி, கேதார் மட்டும் யாத்திரை புறப்படுகிறது. சகல செலவுகள் உள்பட நபர் ஒன்றுக்கு ரூ 1200/—

மேலும் விவரங்களுக்கு:
ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்,
21, அய்யா பிள்ளை வீதி,
திருவல்லிக்கேணி, சென்னை—600 005.

டெலிபோன்: 841957.



சங்கீத கலாநிதி ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீனிவாச அய்யரின் பேத்தியும் ஸ்ரீ கோபாலஸ்வாமி புத்திரியுமான செளபாக்கியவதி பத்மாவிற்கும் சங்கீத கலாநிதி பாலக்காடு ஸ்ரீ கே.வி. நாராயணஸ்வாமியின் குமாரன் சிரஞ்சீவி விஸ்வநாதனுக்கும் சமீபத்தில் விவாஹம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

பொருட்படுத்தாமல், காலகாலத்திற்கும் பயன் தரக் கூடிய பச்சையாறு அணையை வனப் பகுதியை விட்டுக் கொஞ்சம் வெளியில் கட்டினால்தான் என்ன? இது மட்டுமல்ல, தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சியின் பொதுச் செயலாளர் எஸ். ராதாகிருஷ்ணன் தருகிற புள்ளி விவரப்படி, ஆண்டுதோறும் கேரளத்தில் சுமார் 2,500 டி.எம்.சி. மழை நீர் கிடைக்கிறது. ஆனால் தமிழகத்தில் பெய்யும் மழையளவால் சுமார் 1,300 டி.எம்.சி.தான் கிடைக்கிறது. கேரளத்தில் கிடைக்கும் 2,500 டி.எம்.சி.யில் 850 டி.எம்.சி.தான் கேரள நீர்ப்பாசனத்திற்குத் தேவைப்படுகிறது. மழையளவால் கிடைக்கும் 2,500 டி.எம்.சி.யில், அங்குள்ள அணைக் கட்டுகளின் மூலம் 550 டி.எம்.சி.யைத்தான் கேரளாவில் தேக்கி வைக்கிறார்கள். மீதமுள்ள 1,100 டி.எம்.சி. தண்ணீர் வீணாக மேற்கு நோக்கிச் சென்று அரபிக் கடலில் தான் கலக்கிறது. இப்படி வீணாகும் தண்ணீரில் வெறும் 82 டி.எம்.சி.யைத் தமிழகத்திற்குத் திருப்பினால், திருநெல்வேலி மாவட்டம் மட்டுமல்லாமல், வ.உ.சி., காமராஜர், கன்னியாகுமரி மாவட்டங்களிலுமாகச் சேர்ந்து, மொத்தம் சுமார் 8.2 லட்சம் ஏக்கர் நிலப்பரப்பு, பாசன வசதி பெற்று, வளம் கொழிக்கும்.

இப்படி மேற்கு நோக்கிப் பாய்ந்து வீணாகும் நதிகளைத் தமிழகத்திற்குத் திருப்பும் இந்தத் திட்டத்தை ஆராய, மத்திய அரசால் அமைக்கப்பட்ட நீர்ப் பாசனக் கமிஷன், கடந்த 72—லேயே கேரளத்து உபரி நீரைத் தமிழகத்திற்குத் திருப்பலாம் என்று பரிந்துரை செய்துள்ளது. இதை மேலும் ஆராயச் சென்னையிலும், டெல்லியிலும், திருவனந்தபுரத்திலுமாகக் கூடி இதுவரை பதினொரு முறை தமிழக, கேரள, மத்திய அமைச்சர்கள், அதிகாரிகள் என்று பலரும் உட்கார்ந்து பேசியிருக்கிறார்கள். இருந்தும் பயனில்லை. நீர்ப் பாசன வசதி உறுதி செய்யப்படாத ஒரு காரணத்தாலேயே கிராமப்புறங்களிலிருக்கும் சுமார் எண்பது சதவிகித விவசாய மக்கள் வேலை தேடி நகர்ப்புறங்களுக்குக் குடி பெயர்ந்து கொண்டிருக்கும் இந்த வேளையிலும் அமைச்சர்களும், அதிகாரிகளும் இப்படிக் காலம் தாழ்த்திக் கொண்டிருப்பதற்கு என்ன காரணம்? வேறு எந்தப் புண்ணாக்குக் காரணமும் இல்லை. மக்கள் நலனில்—தேச நலனில் நிஜமான அக்கறையில்லாதவர்கள் ஆட்சியிலும் அதிகாரத்திலும் இருப்பதொன்றுதான் காரணம். வெட்கக்கேடு!

— இளங்கோவன்

அட்டையில் சில்லென்று நடந்து வரும் பச்சையாறு, அட்டை வண்ணப்படமும், திருநெல்வேலி மாவட்டம் தொடர்பான மற்ற படங்களும்: கே.வி. ஆனந்த்

# நெல்லையின் பெயர் மாற்றம் சரிதானா?



இசக்கியா பிள்ளை



பரமசிவன்



பாளை. சண்முகம்

திருநெல்வேலி— பெயரோடு சேர்த்து, 'திருநெல்வேலி கட்டபொம்மன்' மாவட்டம் என்று அரசு பெயர் மாற்றம் செய்திருப்பது பற்றித் திருநெல்வேலி ஜனங்கள் என்ன நினைக்கிறார்கள்? மாவட்ட அளவில், பல்வேறு தரப்பினரைக் கட்சி வேறுபாடில்லாமல் விசாரித்தோம்.

நெல்லை கட்டபொம்மன் மாவட்டம் என்று பெயர் அறிவிப்பு வந்ததுமே உடனடியாகக் கண்டனக் கூட்டம் போட்ட பாளை. சண்முகம், "கட்டபொம்மன் பிறந்தது ஒட்டப்பிடாரம். அதுவும் இந்த மாவட்டத்தில் இல்லை. தூக்கிலிட்ட இடம் கயத்தாறு. அதுவும் இங்கு இல்லை. பின் எதற்காக இப்படியொரு பெயர்த் திணிப்பு?" என்கிறார்.

பாளையங்கோட்டை நகர்மன்றத் தலைவர், இந்தப் பெயர் மாற்றத்தைக் கண்டித்து மன்றக் கூட்டத்தில் ஒரு தீர்மானமே போட்டிருக்கிறார். "யாருடைய தூண்டுதலின் பேரில் இந்தப் பெயர் மாற்றத்தைச் செய்திருக்கிறார் எம்.ஜி. ஆர்? திடீர் என்று அறிவிப்புவந்துவிட்டது. இது அவசியமாஎன்றால் அவசியமில்லை. நெல்லைச் சீமை என்று எத்தனையோ வருஷமாகப் பாரம்பரியமாக இருக்கிற பெயரை மாற்றுவானேன்?" என்று புழுக்கமாய்ச் சொன்னார் நெல்லை வியாபாரியான பரமசிவன்.

"ஏன் கட்டபொம்மனை இவ்வளவு பிடிவாதமாகக் கூடாதென்கிறீர்கள்?" என்று நெல்லையிலிருக்கும் தமிழ்நாடு பாட நூல் நிறுவனச் செயலாளராக இருக்கும் இசக்கியா பிள்ளையிடம் கேட்டாலும் கேட்டோம். பொரிந்து தள்ளிவிட்டார்.

"நெல்லை என்ன சாதாரணப் பெயரா? நெல்வேலி நாதரான நெல்லையப்பர் பெயரைத் தாங்கின ஊர். யாரோ ஒரு விவசாயி நெல் காயப்போடும்போது — ஊரெல்லாம் மழை கொட்டுகையில், நெல் காய்ந்த இடம் மட்டும் நனையாமல் இருந்ததாம். இப்படிப்பட்ட மகிமையான, தெய்வ அனுக்கிரஹம் உள்ள பெயரை ஏன் மாத்தணும்? நாங்கள் எழுதுகிற எந்தக் கடிதத்திலேயும் கட்டபொம்மன் மாவட்டம்னு எழுதுறதில்லை, தெரியுமா? சரி.... அப்படியே வெச்சாலும் இந்த ஊருக்கு எவ்வளவோ நல்லது செய்திருக்கிற குர்னிகால் சிங் பேரை இந்த மாவட்டத்திற்கு வைத்தால்கூட ஏற்றுக் கொண்டிருப்போம். கட்டபொம்மனை எதற்காக எங்கள் மாவட்டப் பெயரோடு இணைப்பானேன்?" என்றார்.

"இதுவரை பிரித்த மாவட்டங்களிலெல்லாம் புதிதாய் உருவான மாவட்டத்திற்குத்தான் புதிய பெயர் வைத்திருக்கிறார்கள். பழைய மாவட்டங்களின் பெயர்கள் அப்படியேதான் இருக்கின்றன. பழைய மாவட்டங்களின் பெயர் மாற்றப்படாது என்று முதல்வர் எம்.ஜி. ஆரே சொல்லியிருக்கிறார். அப்படியிருந்தும் திருநெல்வேலிக்கு மட்டும் புதுப் பெயர் சூட்டியது என்ன நியாயம்?" — இது மாதிரியான அபிப்ராயம்தான் திருநெல்வேலி மாவட்டம் முழுவதிலும் இருக்கிறது. ஆனாலும் கட்டபொம்மன் பெயர் மீது நெல்லை ஜனங்களுக்கு மதிப்பு இல்லாமலில்லை. அது வேறு விஷயம். ஆனால் மக்களுடைய அபிப்ராயத்தைக் குறைந்தபட்சம் கேட்காமல், கட்டபொம்மன் பெயரைத் திணித்திருப்பதை அரசாங்கம் மறுபரிசீலனை செய்வதுதான் நல்லது.

—யூகி










ஐந்து வயதுக்குட்பட்ட
குழந்தைகளின் நலத்
திட்டத்துக்காக ராஜீவி
டம் சுமார் 450 கோடி
ரூபாய் எம்.ஜி.ஆர்
கேட்டிருக்கிறார்!




# கல்கி

1987 பிப்ரவரி 22
மலர் 45 இதழ் 30
அக்ஷய மாசி 10




## மதச் சார்புள்ள அரசியல்: ஜனநாயகத்தின் முதல் எதிரி

**ப**ஞ்சாப் முதல்வர் பர்னாலா, இன்று காண்பித்துள்ள வீரம் பாராட்டுக்குரியது மட்டுமல்ல, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது. பொற்கோயிலிலுள்ள சீக்கிய மத குருமார்களின் தலைமைப் பீடம் போட்ட உத்தரவை, ஏற்க மறுப்பதென்பது, தீவிர மதப்பற்று உள்ள ஒருவருக்குச் சாமானிய காரியம் அல்ல. எவ்வளவோ மனவேதனையுடன்தான் அவர் இந்த எதிர்ப்பைக் காட்டியிருக்கிறார். இதற்காக, மத குருமார்கள் அவரைக் குற்றவாளி என்று தீர்ப்பளித்துத் தண்டனையும் விதித்திருக்கிறார்கள். பஞ்சாபிலுள்ள சராசரி சீக்கிய மக்களில் பலர் — விஷயஞானம் அற்ற பாமரர்கள் — மதத் தலைவர்களின் உத்தரவில் உள்ள அநீதியையும் சூழ்ச்சியையும் உணராமல், அதற்குக் கீழ்ப்படிய மறுத்த பர்னாலா மீதே கோபப்படக் கூடும்; அவரை மதத் துரோகி என்று கூடக் கருதக்கூடும். 'சீக்கிய மத குருமார்கள் அகாலி ஒற்றுமைக்குத்தானே பாடுபடுகிறார்கள்? அதற்காகத்தானே அகாலி தளத்தின் பல்வேறு பிரிவுகளையும் கலைத்துவிட்டு, ஒரே தளமாக ஒருங்கிணைய வேண்டும் என்கிறார்கள்? இதற்கு பர்னாலா ஏன் எதிர்ப்புத் தெரிவிக்கிறார்?' என்று பாமர மக்கள் எண்ணக் கூடும். இந்த அபாயம் இருந்த போதிலும், தமது மனசாட்சியின் குரலுக்கு மதிப்பளித்து, ஜனநாயகத்தைப் பஞ்சாபில் காப்பாற்ற வேண்டிய கடமையைத் தம்மால் முடிந்தவரை நிறைவேற்றிவிட வேண்டும் என்ற கருத்தில் பர்னாலா செயல்பட்டிருக்கிறார்.

அகாலிதளத்தின் பல பிரிவுகளையும் கலைத்துவிட வேண்டும் என்று கூறுகிற மத குருமார்கள் அத்துடன் நிற்கவில்லை. புதிதாக ஒரு தளத்தை அமைத்து, அது ஒன்றே சீக்கியர்கள் அனைவரும் ஏற்க வேண்டிய ஒரே அகாலிதளம் என்கிறார்கள். இதிலே பல பயங்கரவாதிகளுக்கு முக்கியமான பதவிகள் தரப்பட்டுள்ளன. இதிலிருந்தே அந்தத் தலைவர்களின் நோக்கம், அகாலி ஒற்றுமை என்பது மட்டுமல்ல என்பதை உணரலாம். அவர்கள், காலிஸ்தான் என்ற தனி நாடு கோரும் பயங்கரவாதிகளின் ஆளுமைக்குள் அடங்கிவிட்டிருக்கிறார்கள். பொற்கோயில் மீண்டும் பயங்கரவாதிகளின் பாசறையாகி விட்டிருக்கிறது.

இதை உணர்ந்துதான் பர்னாலா, இந்த வலையில் விழாததோடு, தமது கட்சி எம். எல். ஏக்களையும் அமைச்சர்களையும் கட்டிக் காப்பதில் தீவிர கவனம் செலுத்தி, இதுவரை வெற்றி பெற்று வந்திருக்கிறார். தமது அகாலிதளத்தைக் (லோங்கோவால் பிரிவு) கலைக்காமலும் கலந்து போகாமலும் காப்பாற்றி வருகிறார். மிகச் சிரமமான இந்தக் காரியத்தில், காங்கிரஸ் எம். எல். ஏக்களின் பரிபூரண ஆதரவு துணை நிற்கிறது. இதைவிடப் பெரிய பக்கபலம், சீக்கிய மதத் தலைவர்களிலேயே வேறு பலர், பொற்கோயில் வளாகத்தில் பிறக்கும் உத்தரவுகளில் நேர்மையில்லை என்பதைச் சுட்டிக்காட்டி, பர்னாலாவுக்கு அளித்து வரும் தார்மீக ஆதரவு. இந்தியா முழுவதிலுமுள்ள பல்வேறு கட்சிகளும் பர்னாலாவின் மன உறுதியைப் போற்றி வாழ்த்துகின்றன.

ஜனநாயக முறையில், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஆட்சி அமைத்துள்ள பர்னாலா அரசைக் கவிழ்ப்பதில், காலிஸ்தான் கோரும் பயங்கரவாதிகள் தவிர, தோரா, பாதல், அம்ரீந்தர் சிங் போன்ற அதிருப்தியாளர்களும் உண்டு. முன்பு அமைச்சரவையிலிருந்து வெளியேறிய இவர்கள், பர்னாலாவின் இன்றைய பலவீனமான நிலையில் அவரிடம் பேரம் பேசி, அவருக்கு ஒத்துழைப்புத் தர நிபந்தனையாக, முதல்வர் பதவியை அவர் தங்களில் ஒருவருக்கு விட்டுக் கொடுக்க வேண்டும் என்று சொல்லக் கூடும்.

இவ்விரு இருதரப்புச் சூழ்ச்சிகளுக்கும் பலியாகாமல் பர்னாலா தப்புவாரா? பஞ்சாபில் தொடர்ந்து ஜனநாயகம் செயல்படுமா? எத்தனை காலம் நீடிக்கும்? உறுதியாகச் சொல்ல முடியாதுதான். மக்கள் ஆட்சி தொடர்ந்து வெற்றிபெற வேண்டும் என்பதே நம் பிரார்த்தனை. ஒருவேளை அது முடியாமல் போனால், அங்கு ஜனாதிபதி ஆட்சி வர வேண்டும். பயங்கர வாதத்துடன் ஒரு போர் நடந்தே ஆக வேண்டும். பிரிவினை சக்திகளுடன் போராடியே தீர வேண்டும். இரண்டையும் வேரோடு கெல்லி எடுத்துப் போகக்கியே ஆக வேண்டும். இது தேச மக்கள் அனைவருக்குமே வேதனையைத்தான் தரும். ஆனால், இந்தச் சேற்றிலிருந்துதான் மதச் சார்பற்ற ஜனநாயகச் செந்தாமரை மீண்டும் அங்கே மலர முடியும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# எல்லையில் வாழ்ந்தால் ஏமாற்றம் தான் மிஞ்சுமா?



* ராமநாதன்

"எங்கள் ஊரைப் பற்றிக் கேட்டால், 'ஒரு காலத்தில் நாங்கள்....' என்று பூர்வ பீடிகையுடன்தான் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது!" என்று சொல்கிறார் செங்கோட்டை தங்கவேலு.

குளுகுளு குற்றாலத்தைக் கடந்து எட்டாவது கி.மீட்டரில் உள்ள சிறு நகரம் (கிராமம்?) செங்கோட்டை. 1956—ல் மொழி வாரியாக மாநிலங்கள் பிரிந்தபோது, தாங்கள் தமிழ்நாட்டுடன்தான் சேர்வோம் என்று போராடித் தாய்த் தமிழகத்துடன் இணைந்தவர்கள் செங்கோட்டைவாசிகள். அப்படிப் போராடி இணைந்தவர்கள், இன்று 'மீண்டும் எங்களைக் கேரளாவுடன் இணையுங்கள்' என்று கோரிக்கை விட ஆரம்பித்திருக்குமளவுக்கு நொந்து போயிருக்கிறார்கள். ஏன் இந்த நிலை?

"நாங்கள் புறக்கணிக்கப்பட்டுக் கொண்டே வருவதுதான் காரணம்" என்கிறார் தங்கவேலு. "மொழிவாரி மாநிலங்கள் பிரிக்கப்பட்டபோது, போடப்பட்ட பணிக்கர் கமிட்டி ஏற்கெனவே இருக்கும் வசதிகள், சலுகைகள் எதையுமே குறைக்கக் கூடாதுஎன்றுகூறியிருந்தது. ஆனால்எல்லாம் தலைகீழாக நடந்திருக்கிறது. 1956—லிருந்தே வசதிகளையெல்லாம் ஒவ்வொன்றாக இழந்து வருகிறோம்..." என்று சொல்லி, அவர், எழுதப்பட்டதொரு நீண்ட பட்டியலையே கொடுத்தார்.

— எங்கள் ஊரில் இயங்கி வந்த யாதவர் கல்லூரியை மூடினார்கள்.

— போக்குவரத்து ஆய்வாளர் அலுவலகம் தென்காசிக்கு மாற்றப்பட்டது.

— மின்வாரியத்தின் கணக்குப் பிரிவு மாற்றப்பட்டது.

— மாவட்ட வனத்துறை அலுவலகம் மாற்றப்பட்டது.

— மாவட்டப் பதிவாளர் அலுவலகம் மாற்றப்பட்டது.

— கட்டபொம்மன் பஸ் டிப்போ தென்காசிக்கு மாற்றப்பட்டது.

— ஆர்.எம்.எஸ். அலுவலகமும் தென்காசிக்கு மாற்றப்பட்டது.

— தனித் தொகுதித் தன்மையை இழந்து, தென்காசித் தொகுதியுடன் இணைக்கப்பட்டது.

— ஆண்கள் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும் மாற்றப்பட்டது.

"இப்போது சொல்லுங்கள் ஸார், இத்தனை அலுவலகங்களையும், வசதிகளையும் இழந்த செங்கோட்டைவாசிகளான நாங்கள் என்ன பாவம் செய்தோம்? இத்தனை அலுவலகங்களும் இருந்திருந்தால் செங்கோட்டை பொருளாதார ரீதியில் வளமாக இருப்பதற்கு வாய்ப்பு இருக்கிறது. இப்போது, 'கோட்டை விட்ட செங்கோட்டை'தான் இது. சரி, இந்த வசதிகள்தான் போகட்டும் என்றால், குதிரை கீழே தள்ளியது மட்டுமல்லாமல் குழியையும் பறித்த கதை உண்டல்லவா. அதுபோலவே முன்பு, மாவட்டத் தலைமை மருத்துவமனையைச் செங்கோட்டையில் அமைப்பதாகச் சொல்லியிருந்தும் இப்போது அந்த ஆஸ்பத்திரியைத் தென்காசிச் சட்டமன்ற உறுப்பினர் வெங்கடரமணன், தமது செல்வாக்கால் தென்காசிக்கு அருகில் கொண்டுபோய்விட்டார். நாங்கள் எவ்வளவு போராடியும் பலன் இல்லை. இது மட்டுமல்ல; ஒன்பதரை ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள எங்கள் மருத்துவமனையில் 1982—லேயே முப்பத்திரண்டு படுக்கைகள் கூடுதலாகப் போட, ஆறு லட்ச ரூபாய் ஒதுக்கினார்கள். ஆனால் அந்தத் தொகை செலவு செய்யப்படவில்லை. 1957—ல் வாஞ்சிநாதன் மெமோரியல் வார்டு கட்ட காமராஜ்

மாவட்ட மருத்துவமனை வேண்டும்

-பட்டதாரிகள்.

'சில பொறுப்புள்ள மனிதரின் தூக்கத்தினால் எங்கள் பொன்னான நகரே தூங்குதப்பா...

-பட்டதாரிகள்

* பட்டதாரி இளைஞர்கள் ஆங்காங்கே ஒட்டியுள்ள போஸ்டர்கள்

அடிக்கல் நாட்டினர். ஆனால் இப்போது அந்த அடிக்கல்லையே தேடி எடுக்க வேண்டிய நிலையில்தான் அத்திட்டம் இருக்கிறது. இப்போதுள்ள ஆஸ்பத்திரியில் நோயாளிகளுக்கு கக்கூஸ் வசதிகூடக் கிடையாது சார். அதனால் சுற்றுப்புறங்களைத்தான் கக்கூஸ்களாக உபயோகிக்கிறார்கள்.

"சரி; இதுதான் போகட்டும் என்றால், கண்ணுப்புள்ளிமேட்டில் சுமார் 56 கோடி செலவில் போடப்பட்டது குண்டாறு அணைத் திட்டம். இப்போது ஒன்றரைக்கோடி ரூபாய்ச் செலவில் அணையைக் குளம்போல் கட்டி முடித்துள்ளார்கள். இப்படி ஒவ்வொரு விஷயத்திலும் நாங்கள் புறக்கணிக்கப் பட்டுக் கொண்டே இருக்கிறோம். இந்நிலையில் இன்னமும் நாங்கள் தமிழ்நாட்டுடன் தான் இணைந்திருக்க வேண்டுமா? கூடிய சீக்கிரம் போராட்டம் வெடிக்கப் போகிறது...!" என்று ஆவேசமாகக் கூறினார் தங்கவேலு.

தங்கவேலுவின் குமுறலைக் கேட்டுவிட்டு, பின்னர் அ.தி.மு.க. கவுன்ஸிலரான முத்துலட்சுமியைச் சந்தித்தோம். அவரும் செங்கோட்டையின் பழைய நிலையையும், இப்போதிருக்கும் நிலையையும் கூறிவிட்டு, நகராட்சி நிலைமையைப் பற்றிச் சொன்னார். "நகராட்சியின் வருமானமே பன்னிரண்டு



* தங்கவேலு * முத்துலட்சுமி

லட்சம்தான். ஆனால், சம்பளமே பதின்மூன்று லட்ச ரூபாய் ஆகிறது. இதனால் முத்துசாமிப் பூங்காவில் உள்ள மரங்களை வெட்டித்தான் சம்பளம் கொடுக்கிறோம். பூங்காவில் கடைகள் கட்டி வாடகைக்கு விடலாம் என்றால் கவுன்ஸிலில் தடுக்கிறார்கள். காரணம், சில தனிப்பட்ட நபர்கள் தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி மரங்களைக் குறைந்த ரேட்டுக்கு ஏலம் எடுத்திருப்பதுதான். பிரமாதமாகப் பேசப்பட்டு வந்த குண்டாறுத் திட்டமும் கழுதை தேய்ந்து கட்டெறும்பானது போல் முடிந்து போனதற்குக் காரணம், முதலில் போட்ட திட்டபடி கட்டினால் தனியார்-நிலங்கள் பாதிக்கப்படும் என்பது தான்!" என்ற முத்துலட்சுமியிடம் இனி மீண்டும் கேரளாவுடன் இணைந்துவிட்டால் மட்டும் உங்களுக்கு மீண்டும் வசதிகள் கிடைத்துவிடுமா என்று கேட்டதற்கு, "நிச்சயமாகக் கிடைக்கும்!" என்றார்.

ஆட்சி பேதமின்றிச் சர்வகட்சிகளிருந்தும் ஒலித்த செங்கோட்டை மக்களின்



* செங்கோட்டை அரசு மருத்துவமனை: படுக்கை வசதியின்றிக் கீழே படுத்திருக்கும் வயதான பெண் நோயாளி

நெஞ்சக் குமுறல்களைக் கேட்டுக் கொண்டு, தென்காசியைத் தாண்டி தெற்கே வந்தோமென்றால், "நெல்லை மாவட்டத்தின் மேற்குப் பகுதியான எங்கள் பகுதி புறக்கணிக்கப்படுகிறது. எனவே நெல்லையின் மேற்குப் பகுதியைத் தனியாகப் பிரித்து, தென்காசியைத் தலைநகராகக் கொண்டு வாஞ்சிநாதன் பெயரில் ஒரு மாவட்டம் துவக்க வேண்டும்!" என்ற குரல் ஒன்று எழுகிறது. இந்தக் குரலுக்குரியவர் வாஞ்சி மாவட்ட இயக்கத் தலைவர் பி. ராமநாதன்.

"ஆறு சட்டமன்றத் தொகுதிகள் உள்ள தென்காசி நாடாளுமன்றத் தொகுதியில் வாசுதேவநல்லூர், சங்கரன்கோயில், ஆலங்குளம், கடையநல்லூர் தொகுதிகளில் விவசாயத்திற்கு மட்டுமல்ல, குடிக்கும் தண்ணீருக்கும் பஞ்சம்தான். மருத்துவ, பொறியியல் கல்லூரிகளெல்லாம் நெல்லையில் இருக்கிறதென்றால், குறைந்தபட்சம் ஒரு தொழிற்பயிற்சிக் கல்லூரியையாவது தென்காசிப் பகுதியில் அமைத்திருக்கலாமே! மூன்று தனியார் பொறியியல் கல்லூரிகள் மாவட்டத்தின் வேறு பகுதிகளில் இருந்தாலும் எங்கள் பகுதியில் இல்லை. பெயருக்குக்கூட ஒரு தொழிற்சாலை இல்லை. இந்தப் பகுதியைப் பிற்பட்ட பகுதி என்று அறிவித்தால், அதனால் கிடைக்கும் சில சலுகைகளைப் பெறவேனும் தொழில் துவங்கச் சிலர் முன்வருவார்கள். அதற்கு வாஞ்சி மாவட்டத்தைத் தனியாகப் பிரித்துத்தான் ஆக வேண்டும். அதற்காகத்தான் எங்கள் இயக்கம். இதன் பின்னால் ஆயிரம் பேர் நின்று குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறோம்" என்றார் பி. ராமநாதன்.

"இப்போதுதானே இரண்டாகப் பிரித்தார்கள். மூன்றாக பிரிப்பதற்கு வாய்ப்பிருக்கிறதா?" என்று கேட்டபோது, "பதினாறு கி.மீ. இடைவெளியில் உள்ள நாகப்பட்டினமும் திருவாரூரும் மாவட்டத் தலைநகர்களாக மாற்றப்பட இருக்கும்போது 54 கி.மீ. இடைவெளி உள்ள தென்காசியும் திருநெல்வேலியும் மாவட்டத் தலைநகராகக் கூடாதா?" என்று கோபப்பட்டார் ராமநாதன். மேற்குப் பகுதி மக்கள் இப்படிப் புறக்கணிக்கப்படுவதாக உணர்வதை அரசு இனியாவது புரிந்து கொண்டு செயல்பட வேண்டும்.

— கௌசல்யா

படங்கள்: கவிராயர்

# பொன்மொழிப் போட்டி வைத்தாலும் வைத்தீர்கள்...

* மாவீரன் நெடுமாறனின் பேட்டி இந்துக்களின் புண்பட்டுப் போன மத உணர்வுகளின் முழுமையான வெளிப்பாடு. ஐந்தாவது கேள்விக்கான அவர் பதில், மரத்துப் போன இந்து மத உணர்வுகளைச் சிறிதாவது உயிர்த்தெழச் செய்யும். இந்த நிலைமை அரசாங்கம் நீடிக்கச் செய்யுமானால் நமது கோவில் மூலவர்களை, வெளிநாட்டு இந்தியக் கலாசார விழாக்களிலும், உள்நாட்டுக் கடற்கரை வாசஸ்தலங்களிலும் காட்சிப் பொருளாகத்தான் காண முடியும்.

விழுப்புரம். கே.எஸ். குமார்.

* முதல் பக்கத்திலேயே உறைக்கும்படியாக ஒரு பேட்டியை எழுதியுள்ளீர்கள். உண்மையிலேயே இது போல நடந்தால் நம் முன்னோர்களின் கலைப்பொக்கிஷங்களான இந்துக் கோயில்கள் மீண்டும் தலை நிமிர்ந்து நிற்கும் என்பதில் சந்தேகமில்லை. பாராட்டுக்கள்!

மதுரை—20. ஜி. ராஜேஷ்கோபால்.

* உயர்ந்த கோபுரங்கள்; கும்மிருட்டுக் குகைகளாகச் செயல்படும் தாழ்ந்த மனித மனங்கள். நெடுமாறன் வெளிச்சப்படுத்திய, கொள்ளை போகும் கோவில் சொத்துக்களின் அளவைத் துப்புத் துலக்கிக் கண்டு பிடிப்பதென்பது 'ஸ்காட்லாண்ட் யார்ட் போலீஸால்' கூட இயலாத காரியம்.

ஸ்ரீரங்கம். ஜி. பத்மா.

* சமுதாயப் பணி மட்டுமல்லாது கேள்வி கேட்பாரற்று அனாதைபோல் கருதப்படும் இந்து சமயத்திற்குத் தாங்கள் நெடுமாறன் மூலம் செய்த சமயப் பணி, கோடானுகோடி ஹிந்துக்களின் மனக்குமுறலின் வெளிப்பாடாக அமைந்திருந்தது. நன்றி. அதேபோல் காதல் பரிசு பட விமர்சனத்தில் 'கமலஹாசனின் உடைகள் ஒன்றும் அப்படி ஜோராக இல்லை' என்று எழுதி வாணி இல்லாத குறையை மிக மென்மையாகச் சுட்டிக்காட்டிவிட்டீர்களே; சபாஷ்!

புத்தாம்பூர். இரா. செல்வ பாண்டியன்.

* 'காதல் பரிசு' 'கிழக்கு ஆப்பிரிக்காவில் ஷீலா' ஆகிய இரு படங்களுக்கும் சுளகச்சிதமாக விமர்சனம் பண்ணியிருந்தீர்கள். அதாவது என்னை முன்னெச்சரிக்கையாக இந்த இரண்டு அறுவைகளிடமிருந்து காப்பாற்றிவிட்டீர்கள் என்று சொல்ல வருகிறேன்!

புத்தளம்பட்டி. பி. மணி.

* 'காதுல பூ — பிரதமர் சுற்றியது!' தலையங்கம் உண்மையைப் படிப்படியாகத் தோலுரித்துக் காட்டியது. சுவிஸ் வங்கிக்குச் சொந்தக்காரர்களான நம் நாட்டுப் பண முதலைகளால் என்றாவது ஒருநாள் வி.பி. சிங் பழிவாங்கப்படுவார் என்று நான் என்றோ நினைத்தேன். அப்படியே நடந்துவிட்டது.

தகட்டூர். க.ம. வீரபாண்டியன்.

* நேர்மையான அரசியல்வாதிக்கு இந்திய அரசியலில் இடமில்லை என்பதை வி.பி. சிங்கின் இலாகா மாற்றம் மீண்டும் நிரூபித்திருக்கிறது.

கோவை—16. பாப்பம்பட்டி ராஜா.

* பாரதப் பிரதமர், தேசத்தைவிட தேர்தலுக்குத்தான் முக்கியத்துவம் தருகிறார் என்பதைப் பாரபட்சமின்றி எடுத்துக் கூறியுள்ளீர்கள். பிரதமர் பதவியைத் தக்க வைத்துக் கொள்வதே தமது திட்டம் என்பதை ராஜீவ் உணர்த்துகிறார் என்பதைத் திட்டவட்டமாக எடுத்துக் கூறிய உங்கள் தலையங்கத்திற்கு, என் பாராட்டுக்கள்.

சென்னை—39. பி.தெ. இளமுருகன்.

* பொன்மொழிப்போட்டி வைத்தாலும் வைத்தீர்கள். என் தம்பி நூலகம் சென்று அங்குள்ள அனைத்துப் புத்தகங்களையும் புரட்டி எடுத்துவிடுகிறான். பேஷ்! அவன் பொது அறிவை வளர்க்கும் கல்கிக்கு நன்றி.

விருத்தாசலம் — 1. கிருஷ்ண குருராஜ்.

* புதுக்கவிதைப் போட்டி — 7 —ல் வந்த கவிதைகள் அனைத்தும் என் மனத்தைக்கவர்ந்துவிட்டன. 'செலக்ட்' செய்வதில் கல்கிக்கு நிகர் கல்கியே. எக்ஸலெண்ட் சார்!

நந்தியநல்லூர். அ. பாபுஜி.

* பெ. தூரன் அவர்களைப் பற்றிய கட்டுரை, பிரமிக்க வைத்தது. ஒவ்வொரு சொல்லும் அவர்மேல் மரியாதையையும் மதிப்பையும் ஏற்படுத்தியது. பின் வரும் சந்ததியினருக்கு, இக்கட்டுரை மிகவும் பயனுள்ளதாய் இருக்கும்.

தக்கலை. க. சங்கரசுப்பு.

* 'அமைச்சருக்கு ஜே!' சிறுகதை மாறுபட்ட சிந்தனையாக அமைந்தது; நமது அரசியல்வாதிகளின் அக்கிரமங்கள், தொண்டர்களிடமே அன்பளிப்பை எதிர் நோக்குகிற தன்மை தொடர்ந்தால் போன். ஜெயந்தனின் கனவு நனவாகிவிட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

திருமங்கலம். எம். வேணுப்ரியன்.

* 8.2.87 கல்கி தராசு பதில்கள் பகுதியில் தியாகராஜ கீர்த்தனைகளை அர்த்தம் புரிந்து, ரசிக்க வசதியாகப் பிரபலமான பாடல்களுக்குத் தமிழ் விளக்கம் அமைத்து சிறு நூலாக வெளியிடுவது சிறந்த சேவையாகும் என்று குறிப்பிட்டிருந்தீர்கள். இந்தக் காரியத்தை வானதி பதிப்பகம் ஏற்கெனவே செய்துள்ளது. இவ்வாண்டு திருவையாற்றில் நடைபெற்ற தியாகராஜ ஆராதனை விழாவில் ஐம்பத்தைந்து தியாகராஜர் கீர்த்தனைகளைத் தமிழ் விளக்கவுரையுடன் சிறு நூல் வடிவில் வெளியிட்டோம். தமிழ் விளக்கவுரை: கவிஞர் மா. வரதராஜன். விலை ரூ 10/—.

திருநாவுக்கரசு,
சென்னை—17. வானதி பதிப்பகம்.

கல்யாணகுமார்

# வந்தேமாதரம் என்போம்...




அடி வயிற்றைப் பிசைகிறது எனச் சிலர் சொல்வதைக் கேட்டிருக்கிறேன். அப்படி என்றால் என்ன என எனக்குத் தெரியவில்லை. ஆனால் இன்று புரிந்துவிட்டது. பயம் என் அடிவயிற்றைப் பிசைந்துகொண்டிருந்தது.

பட்டாளக்காரன் வேறு கத்தி வாங்கிக்கொண்டு சென்றபின், நாலு நாட்களாக வீட்டுப் பக்கமே காணோம். என் சித்தப்பாவை உங்களுக்குத் தெரியாது. ஐயோ, அவர் முறைத்தாலே போதாதா? அடி வேறு வாங்க வேண்டுமா?

அந்தப் பட்டாளக்காரனை... பல்லைக் கடித்தேன். தப்பு என்னுடையதுதான். அப்பா ஊரிலிருந்து லெட்டர் போட்டிருந்தார். குமார் ஆறாவது பாஸ் செய்துவிட்டான்.

நேற்றுத்தான் ஸ்கூலில் ரிசல்ட் ஒட்டினார்கள்!

அவ்வளவுதான் கல்கண்டும், சாக்லேட்டும் அந்த மத்திய சிறை நிலைய அலுவலர் குடியிருப்பில் திமிலோகப்பட்டது. என்னுள் ஏதோ இமய மலையைத் தாண்டிவிட்டாற் போன்ற பெருமை: அதே பெருமையோடு துணி துவைக்க வந்திருந்த பட்டாளக்காரனிடம் போக வேண்டுமா?

அவன் என்னைப் பாராட்டியபடியே நைச்சியமாகப் பேசி, சித்தி காய் நறுக்க வைத்திருந்த கத்தியை வாங்கிக் கொண்டு போய்விட்டான்.

ஓ... அவனை உங்களுக்குத் தெரியாதல்லவா? தெரிந்தால் நான் ஏன் இப்படிப் பயந்து சாகிறேன் என்பது உங்களுக்குப் புரிந்துவிடும்.

அவன் ஒரு கொலைகாரன். ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டு, தண்டனை அனுபவித்துக் கொண்டிருப்பவன். வட்டக் கிராப் போடு கூடிய வெளுத்த தலையும், சிறிய உள் குழி விழுந்த கண்களும், மீசையில்லாமல் மழுங்கச் சிரைக்கப்பட்ட, அம்மை வடு நிறைந்த கறுத்த முகமும்.... ஒல்லியான தேகமும், அந்தச் சாயம் போன செம்மண் கலர் கதர்ச் சட்டையும் அரை டிராயரும் தொள தொளவென அணிந்து கொண்டு... சட்டையின் இடது பக்க நெஞ்சில் நீலக் கலரில் எண் குறிக்கப்பட்டிருக்கும்.

என் சித்தப்பா இந்தச் சிறைக் கூடத்தின் ஜெயிலர். இவனையும், இவனைப் போன்ற ஆயுள் தண்டனைக் கைதிகளையும் அவர்கள் நல்ல முறையில் நடந்தால், இதுபோல் பிரித்து ஆபீஸர் வீடுகளுக்குத் தோட்ட வேலை செய்ய, மற்றும் பல்வேறு வேலைகளுக்கு (பாத்திரம் தேய்க்க, துணி துவைக்க, சுண்ணாம்பு அடிக்க... இத்யாதி) உபயோகித்துக் கொள்வார்கள்.

இவன் தினமும் எங்கள் வீட்டிற்கே வருவான். எங்கள் வீட்டில் சித்தி அதிக வேலை தரமாட்டாள். துணி மட்டும் துவைத்துப் போடுவான். அவனே வெட்டியாய்க் கிடந்த புழக்கடையைச் சீர்திருத்தி அந்தத் தோட்டத்தைப் போட்டிருந்தான்.

நான் லீவுக்கு வந்த இரண்டு வாரத்தில் அவனும் நானும் ரொம்ப நெருங்கிவிட்டோம். இவனின் உண்மைப்பெயர் தெரியாது. தெரிந்து கொள்ளவும் விரும்பவில்லை. ஆனால் ராணுவத்தில் இருந்தவன் என்பதால் 'பட்டாளத்துக்காரா' என்றே கூப்பிடுவேன். ஏனென்றால் சித்தப்பாவும் அதே போல்தான் அவனைக் கூப்பிடுவார்.

அவன் வேலை ஏதும் இல்லாவிட்டால், வார்டன் வந்து கூப்பிடும்வரை, வேப்ப மர நிழலோடு அமர்ந்தபடி தன்னைப் பற்றிச் சொல்வான்.

அவனின் ராணுவ வாழ்க்கையை விடச் சொந்த வாழ்க்கை மிகவும் சோகமானது.

''ஏஞ்சாமி நான் நம்ம நாட்டோட மானத்தைக் காக்க, என் கால்ல குண்டடி பட்டுப் போராடினேன். பதக்கம்லாம் தந்து பாராட்டினாங்க. அப்புறம் ஊருக்குத் திரும்பி வந்து வாழ்க்கை நடத்தினப்ப, என் மகளோட மானத்தைக் காப்பாத்த ஒருத்தனை அடிச்சேன். அவ்வளவுதான்; கையில வெலங்கு போட்டு இங்கே கூட்டியாந்துட்டாங்க. ஆயுள் தண்டனை தீட்டிட்டாங்க. எப்படிப் பார்த்தியா ராசா, நாட்டுக்கு ஒரு நீதியாம்... வீட்டுக்கொரு நீதியாம்! அதோட தேச மானத்தைக் காக்க எத்தனை பேர்களை வேண்ணாலும் கொல்லலாமாம். அது தேச சேவையாம். இங்க ஊட்டுல பொண்டாட்டி, மவ இவங்களோட மானத்தைக் காக்க யாரை யாவது அடிச்சா, கொன்னா அது குத்தமாம். ம்...'' — இதை அவன் சொல்லும்போது நீங்கள் அவனின் முகத்தைப் பார்க்க வேண்டும். கண்கள் சிவந்து, அந்தக் காவியேறிய பற்களை நறநறவெனக் கடித்தபடி....

''என்னதான் சொல்ற, கொஞ்சம் வெளக்கமாத்தான் சொல்லேன்!''

''ம்...'' என்றவன், ''நான் பட்டாளத்தில இருந்து நிக்கக் காரணமே என் பொண்டாட்டி செத்ததுதான். திடீர்னு வந்த காய்ச்சலால அவ செத்துப் போயிட்டா. அதனாலதான் வயசு வந்த பொண்ணு தனியா கிராமத்துல வாழ முடியாதேன்னு ஊருக்குத் திரும்பி வந்தேன். எனக்குச் சுலபமா வேலை கெடைச்சிருச்சி; அந்த ஊரு பிரசிடெண்டு ஐயாகிட்ட. அவரு பேரு பரமசிவம். நான் அவரு கூடவே போவேன். வருவேன். 'பாடிகாடு' மாதிரி. பரமசிவத்துக்கு டவுன்ல ஒரு கட்சி ஆளுகூட நெருங்கிப் பழக்கம். அந்த ஆளும் அடிக்கடி இவன் ஊட்டுக்கு வருவான். இந்த ஆளும் டவுனுக்கு அடிக்கடி போகும். டவுன் ஆளு கைலாசம். பிரசி



''வேலையிலிருக்கிற பெண்தான் வேணும்னு பிடிவாதமா இருந்த உங்க அம்மா அரண்டு போயிருக்காங்களாமே?''

''ஆமாண்டா. வந்திருக்கிறது பெண் போலீஸ் ஆச்சே!''

— ஊழை அ. கதிர்வேல்



"மந்திரி பதவிங்கறது மின்சாரம் மாதிரி..."

"அவ்வளவு 'பவர் ஃபுல்'னு சொல் றீங்களா?"

"இல்லே எப்பொழுது வரும், எப்பொழுது போகும்னே சொல்ல முடியாதே. அதை வைச்சுத்தான் சொன்னேன்."

— நவபாரதி

டெண்டு அம்மா 'ஊட்டு வேலேங்களை செய்ய ஒம்பொண்ணை வேண்ணு அனுப்பேன்'னு கேட்டுகிட்டதால ஊட்டு வேலைக்கு அனுப்பினேன். ஒரு நாள், பரமசிவம் என்னை அவசரமா டவுனுக்கு அனுப்பிட்டார். சாயந்திரமா ஊடு திரும்பறேன். ஒடம்புல ஏகப்பட்ட கீறலோட பாவாடை தாவணியெல்லாம் கிழிஞ்சு, என் பொண்ணு, 'அப்பாரே'ன்னு ஓடி வந்து கட்டிகிட்டா... என் நெலைமை எப்படியிருக்கும்னு யோசிச்சுப் பாரு ராசா?" — என்றவன் யோசிக்க டயம் கொடுத்தான்.

பின், ".... நல்லவேளை அந்த ஆளுங்க கிட்ட சிக்கி மானத்தை இழக்காம தப்பிச்சு ஓடி வந்துட்டா. அப்ப வந்தது பாரு ஒரு வெறி... எரவாணத்துல சொருகியிருந்த கொடுவாளை எடுத்துகிட்டுப் பிரசிடெண்டு ஊட்டுக்கு ஓடினேன். டவுன்காரன் ஓடிட்டானுட்டம் இருக்கு. நான் தெருவுல நின்னு சத்தம் போட்டதும் ஒண்ணுமே நடக்காத மாதிரி அந்த ஆளு வந்தான். அதுக்குள்ள சுத்தியும் ஜனங்க கூடிட்டாங்க. என்கிட்டே இருந்த கொடுவாளை யாரோ பறிச்சுட்டாங்க. ஆனா நான் பட்டாளத்தான் சாமி. கையிருக்கில்ல. சும்மா அவனைப் பிடிச்சி வெளாசிட்டேன்.

"எல்லோருமா வந்து எங்களைப் பிரிச்சுட்டாங்க. அந்த ஆளை டவுன் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனாங்க. அடி கொஞ்சம் பலம் தான். ஆனா எந்திரிக்க ஒரு வாரம் ஆவும் அப்பமன்னு ஊர்ல பேசிக்கிட்டாங்க. ஆனா ரெண்டு நாள் கழிச்சு விடிகாத்தால போலீஸ் வந்து, பஞ்சாயத்துப் பிரசிடெண்டைக் கொலை செஞ்சதா என்னைக் கைது பண்ணி ஸ்டேஷனுக்குப் பிடிச்சுப் போயிட்டாங்க. நான் அடிச்சேன், ஆனா கொலை பண்ணலேன்னு சுத்தியும் என் வீட்டு எரவாணத்துல சொருகியிருந்த ரத்தம் தோய்ஞ்ச கொடுவாளும், அன்னைக்கி நான் அடிச்சதப் பார்த்த ஊர் சாட்சிகளும் பலமான சாட்சியங்களாப் போனதால செய்யாத கொலைக்காக இதோ தண்டனை அனுபவிச்சுகிட்டிருக்கேன்."

"அப்ப பரமசிவத்தை யார் கொன்னுங்க?"

"கைலாசம். அவன்தான் கொன்னுட்டான். அவங்களுக்குள்ள ஆயிரம் இருக்கும். இடையில நான் வரவும் சமயத்தைப் பயன்படுத்திக்கிட்டான். அவனை.... அவனை..."

"நீயும் ஜெயிலுக்கு வந்துட்டே. அப்ப ஒன் மவ...."

"ம்...." — என அடுப்பு ஊது குழலைப் போல் நெடியதாய் ஒரு பெருமூச்சுவிட்டான். லேசாய்க் கண்கள் கலங்கியிருந்தன.

"அந்த ஆளு... அதான் .கைலாசம்.... அவன்... தான் நெனச்சதை நிறைவேத்திட்டான் ராசா, நிறைவேத்திட்டான். மூணு வருஷம் முன்னாடி இங்க என்னைப் பார்க்க வந்த என் மக, 'அப்பாரே... நான் மோசம் போயிட்டேனே'ன்னு அழுதது இன்னும் என் கண்ணுக்குள்ள தூசி விழுந்தா மாதிரி நின்னு குத்திகிட்டேயிருக்கு.... என்னைப் பாத்துட்டு வீட்டுக்குப் போனவ, தழையை அரைச்சிக்குடிச்சுட்டுச் செத்துப்போயிட்டா ராசா!" — அழுதான்.

சித்தப்பா அடிக்கடி சித்தியிடம் கூறிக் கொண்டிருந்தது நினைவுக்கு வந்து பயம் மூட்டியது.

"இங்கப் பாரு மைதிலி. எந்தக் காரணத்தைக் கொண்டும் அந்த ஆளுங்களை வீட்டுக்குள்ள விடக் கூடாது. அவங்க கையில கத்தியோ, வேறே எந்தவிதமான ஆபத்தை விளைவிக்கக் கூடிய பொருள்களையோ கொடுக்கக் கூடாது. சொல்லப் போனா, ஊறுகாய் பாட்டில்ல இருக்கே, எவர்சில்வர் ஸ்பூன், கண்டு விரல் நீளத்துக்கு. அது கூட அவங்ககிட்டச் சிக்கினா பலமான ஓர் ஆயுதமாயிடும். அதனால ஜாக்கிரதையா இரு.

பட்டாளக்காரனை நினைத்துக் கோபம் கோபமாய் வந்தது. 'நொண்டிக்காலா, பொட்டைக்கண்ணா, வட்டக்கிராப்பு, ஒல்லி பிச்சான்...' என வாய் தாராளமாய்த் திட்டிக் கொண்டிருந்தது. ஆனால் அவன் கத்தியை வாங்கிக் கொண்டு போன மறு நாளிலிருந்து ஆளே வரவில்லை.

எந்த நேரத்தில் என்ன தகவல் வருமோ, எப்போது சித்தப்பாவின் முரட்டுக்கை முறமாய் என் முதுகில் படுமோ என, மனம் படக்... படக்கென அடித்துக் கொண்டிருந்தது.

அன்று விடிந்த பின்னும் தூக்கம் போகாமல் மசமசவென்று எழுந்து பின் கட்டுக்குச் சென்றேன். கிழக்கே சூரியன், ரத்தச் சிவப்பில் குளித்தபடி மேலே ஏறிக் கொண்டிருந்தான்.

வேப்ப மரத்தில் சிறிது வாசனையாய்க் காற்று வீசிக் கொண்டிருந்தது. ஒரு வேப்பம்

பழும் லொட்டெனத் தலையில் விழுந்து திடுக்குறச் செய்தது. மனசு 'இன்று ஏதோ நடக்கப் போகிறது' எனத் துடிக்க ஆரம்பித்தது.

'அம்மா... அம்மா...'—என்றகுரல்ஒலிக்க, ஆ... பட்டாளக்காரன் நின்று கொண்டிருந்தான். சட்டென என்னுள் பயம் மறைந்து பலம் தோன்றியது.

"எங்க கத்தி? வாங்கிட்டுப் போனதுக்கப்புறம் நீ வரவேயில்லே? கொடுத்துடு அதை! இல்லாட்டா என் சித்தப்பா கிட்டச் சொல்லிடுவேன். ம்!" — தைரியமாகக் கத்திக் கேட்டேன்.

"சாமி... ராசா... கத்திப் பேசாத. இந்தா அதைத் தரேன்!" — என்றபடி இடுப்பு அரைஞாண் கயிற்றில் கட்டி வைத்திருந்த கத்தியை அவிழ்த்து எடுத்துத் தந்தான்.

அப்பாடியோ! ஏதோ உலகமே என்மேல் அழுந்திக் கொண்டிருந்தது, போலவும் அதிலிருந்து நான் திடீரென விடுபட்டு லேசானது போலவும் உணர்ந்தேன்.

"அப்புறம் சாமி, இன்னைக்கி ராத்திரி குடியரசு தினவிழா நடக்குதில்ல. அதுல நான் தியாகி குமரன் வேஷம் போட்டு நடிக்கறேன். நீங்கள்ளாம் கண்டிப்பா வரணும். நான் எப்படி நடிக்கறேன்னு சொல்லணும்!" — என்றான்.

என் கைக்குக் கத்தி வந்ததும் அவனை அலட்சியப்படுத்திவிட்டேன். "போய்யா சரிதான். நீயும் உன் நாடகமும்" — என்றபடி உள்ளே வந்து விட்டேன்.

**அ**ன்று மாலை ஐந்தரை மணிக்கு வீட்டில் மூவரும் ரெடியானோம். வீட்டைப் பூட்டி, கேட்டை சாத்தி சித்தப்பா பைக்கில் அமர்ந்து ஸ்டார்ட் செய்ததும் சித்தி அமர்ந்தாள். அவளுக்குப் பின்னே நான் அமர்ந்தேன். அது பீறிட்டு விழா நடக்கும் கலா மன்றத்தை நோக்கிப் பறந்தது.

ஜே... ஜே... என ஏராளமான மக்கள். சித்தப்பா அலுவலக டிரெஸ்ஸில் இருந்தார். அதனால் நானும் சித்தியும் மட்டும் உள்ளே சென்று நாடக மேடை தெரியும்படி இடம் பார்த்து அமர்ந்து கொண்டோம்.

விழா ஆரம்பித்தவுடன் பெரிய அங்கவஸ்திரத்துடன் பட்டு வேட்டி பளபளக்கத் தங்க ப்ரேம் கண்ணாடி போட்டுக் கொண்டிருந்த ஒருவருக்கு நிறையப் பேர் ரோஜா மாலை போட்டார்கள். அவரும் பேசும் போது, "அதைச் செய்யலாம், இதைப் பிடிக்கலாம்" என்றபடியேயிருந்தார். யாரெனக் கேட்டதற்கு இந்தத் தொகுதி எம்.எல்.ஏ. என்று பதில் வந்தது.

"அட சீக்கிரம் கலைநிகழ்ச்சிகளை ஆரம்பிங்கய்யா, சாவு கிராக்கிங்களை வுட்டு மண்ட காய வக்கிறீங்களே' என மெல்ல முணுமுணுத்தேன். சித்தி தொடையில் செல்லமாய்க் கிள்ளி 'ஷ்' என்றாள்.

சிறிது நேரத்தில் மேடையில் இருந்தவர்கள் கீழே முதல் வரிசையில் அமர்ந்ததும் திரை போடப்பட்டது. மெல்ல இசைக் கருவிகளின் சப்தங்கள் ஒலிக்க ஆரம்பித்தன.

திரை சடசட்டென விலகியதும் பளீரென விளக்குகள் ஒளியை உமிழ... கையில் நீளமாய் மூவர்ணக் கொடியுடன்... 'அட, நம்ப பட்டாளக்காரன். காத்தால கூட என்னமோ சொன்னானே, ஆங்... தியாகி குமரன்! கரெக்ட்!'

முகத்தில் லேசாய்ப் பவுடர் போட்டுக் கொண்டு, வெள்ளைத் தொப்பி, வெள்ளைச் சட்டை, அரை டிராயருடன், அவனைப் போலவே இன்னும் பத்துப் பன்னிரண்டு பேர் சூழ்ந்து நிற்க... அவர்களைச் சுற்றி ஆங்கிலச் சிப்பாய்கள் போல வேஷம் போட்டுக் கொண்டு கையில் லத்தியோடு சிலர் இருக்க...

கணீரென... "வந்தே மாதரம்!" — என பட்டாளக்காரன் கர்ஜித்தான். கூடவே மற்றையோரும்.

சிப்பாய்களின் தலைவன் போலிருந்தவன், "டேய், கொடியைக் கீழே போட்டுட்டு ஓடிடுங்க. இல்லாட்டா லத்தி சார்ஜ் பண்ணிக் கூட்டத்தைக் கலைப்போம்" என மிரட்டினான்.

"முடியாது. எங்கள் உயிரே போனாலும் இந்தக் கொடியை மண்ணில் சாய விட மாட்டோம். சுதந்திரம் எமது பிறப்புரிமை. அதனை அடைந்தே தீருவோம். வந்தே மாதரம்! வந்தே மாதரம்!" — அவனுடன் சேர்ந்து மற்றவரும் கோரஸாகச் சொல்ல, சிப்பாய்த் தலைவன், "சார்ஜ்" எனக் கத்த, விநாடியில் தேனீக் கூட்டத்தைக் கலைத்தாற் போல்மேடையில்கசமுசாவெனக்கூச்சலும், குழப்பமும் ஏற்பட... நான் பட்டாளக்காரனையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவன், "வந்தே மாதரம்" எனக் கத்திக் கொண்டே முகத்தில் இதுவரை பார்த்திராத ஓர் இறுகிய தன்மையுடன் — அந்தச் சொற்கள் வெறுமே உதட்டளவிலிருந்து வராமல் உள்ளத்திலிருந்து கிளம்புவதாய்... கூட்டத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு வெளிவந்தவன் கையில் பிடித்திருந்த கொடிக்கம்பை... அப்படியே சாய்த்து, காளியின் சூலாயுதமாய்... அந்த நிகழ்ச்சி யாருமே நினைத்துப் பார்த்திராத விநாடியில் நிகழ்ந்து முடிந்து விட்டது.

தங்க ப்ரேம் கண்ணாடி போட்ட ஆளின் நெஞ்சக் குருதியை மறைத்தபடி தேசியக் கொடி படுத்துக் கிடந்தது.

அந்தக் கம்பை, கத்தியைக் கொண்டு நன்றாகச் சீவி, கத்தியைப் போலாக்கி அதை மறைக்க, கொடியை அவ்விடத்தில் கட்டி... மிகத் திறமையாகத் திட்டமிட்டிருக்கிறான்.

போலீசார் உடனே ஓடி வந்து அவனை மடக்கி இழுத்துச் சென்றனர். தங்க ப்ரேம் கண்ணாடி ஆளின் பெயர் என்ன எனக் கேட்டேன். 'கைலாசம்' என பதில் கிடைத்ததும், என்னுள் திடீரென எங்கிருந்தோ ஒரு புதிய உத்வேகம் பீறிட்டுக் கிளம்ப வெறி பிடித்தாற்போல் "வந்தே மாதரம்!" என்று கத்தினேன். கூட்டம் அனைத்துமே ஒரு நிமிடம் வியப்புடன் என்னைப் பார்க்க... பட்டாளக்காரன் என்னை நோக்கிக் கையை அசைத்தான்.

# ஒரு சிறுவனின் மரணமும் எழும் சந்தேகங்களும்...

• இறந்த சிறுவன் மயில்வாகனன்

"அப்பா, நோட்டுப் புஸ்தகம் வாங்க வேண்டும். காசு கொடு!" என்ருன் என் பதின்மூன்று வயதுப் பையன் மயில்வாகனன். "இன்று காசு இல்லே. நாளைக்கு நானே வந்து வாங்கித் தருகிறேன், போ!" என்றேன் நான். அவனும் சைக்கிளை எடுத்துக் கொண்டு போய்விட்டான். நானும் வழக்கம் போல் வயல் வேலைக்குச் சென்றுவிட்டேன்.

"அன்று இரவு நான் வேலை முடிந்து வந்து அசதியோடு தூங்கிக் கொண்டிருந்தபோது மூன்று பேர் வந்து எழுப்பினார்கள். அப்போது இரவு சுமார் ஒன்பதரை அல்லது பத்து மணி இருக்கும். வந்து எழுப்பியவர்கள், என் மகன் படிக்கும் ருக்மணி உயர் துவக்கப் பள்ளியின் மானேஜர் முத்தையாவின் கார் டிரைவரும் மற்றும் இரண்டு வேலைக்காரர்களுமாக இருக்கவே, நான் அலறியடித்துக் கொண்டு எழுந்தேன்.

"உன் மகன் மயில்வாகனன் மற்ற பசங்களோடு சண்டை போட்டதால் அடிபட்டு விட்டான். அதனால் அவனைக் கடையநல்லூர் அரசாங்க ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறோம்" என்றார் வந்தவர்களில் ஒருவர். 'ஏதோ அரளி விதை சாப்பிட்டுவிட்டான் போலிருக்கிறது' என்றார் இன்னொருவர். எனக்கு ஒன்றும் விளங்காததால் பதற்றத்துடனும் குழப்பத்துடனும் அவர்களுடைய காரில் புறப்பட்டுச் சென்றேன்.



• ராஜரத்தினம்

"ஆஸ்பத்திரிக்குச் சென்று நான் பார்க்க



• இராணி

போது, என் மகன் இறந்து போயிருந்தான். தொப்புள் வீங்கியிருந்தது. வலது முட்டிக் காலில் காயம் இருந்தது. இதையெல்லாம் பார்த்தபோது, எனக்குச் சந்தேகம் வந்து விட்டது. எனவே என் மகனுக்கு மருத்துவம் செய்த டாக்டர் சுப்பிரமணியம் மற்றுமுள்ள நர்ஸ்கள் ஆகியோரைக் கேட்டேன். அவர்களும் என் மகனுடைய மரணத்திற்கான சரியான காரணத்தைச் சொல்லவில்லை. அனைவரும் எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரம் பிணத்தைக் கொண்டுபோய் எரிக்கச்

செய்வதிலேயேதான் குறியாக இருந்தார்கள்.

''இதையெல்லாம் கண்ட எனக்கு என் மகனின் இறப்பில் சந்தேகம் வந்துவிட்டது. அதனால் பிரேதப் பரிசோதனை செய்யச் சொன்னேன். ஆரம்பத்தில் அவர்கள் அதற்கு உடன்படாவிட்டாலும் எனது பிடிவாதம் காரணமாகக் கடைசியில் வேறு வழியின்றிப் பிரேதப் பரிசோதனை செய்தார்கள்.

''பிரேதப் பரிசோதனை முடிந்தவுடன் உடனடியாகப் பிணத்தைக் கொண்டு போய் எரித்துவிட வேண்டும் என்றார்கள். நான் அப்படியெல்லாம் முடியாது. செய்ய வேண்டிய சடங்குகளையெல்லாம் செய்துதான் எரிக்க வேண்டுமென்று சொல்லிவிட்டேன். அடுத்த நாள் பிணம் எரிக்கப்பட்டபோது, பள்ளிக்கூடத்திலிருந்து வந்திருந்த ஆட்கள், பிணம் சரியாக எரிந்ததா என்று கடைசிவரை இருந்து பார்த்துவிட்டுத்தான் சென்றார்கள். அதனால் எனது சந்தேகம் பலமாக வலுத்துவிட்டது.

''இதற்கிடையில் என் மகனின் இறுதிச் சடங்கிற்கு வந்திருந்த பெரியசாமிபுரத்தைச் சேர்ந்த ஒருவர், அதே பள்ளியில் படித்த ராமையா என்பவரின் மகன் வெள்ளைத்துரை என்பவனும் இப்படித்தான் செத்துப் போனான் என்றார். இதற்குமுன் இப்படிச் சில மாணவ, மாணவிகள் திடீரென்று மர்மமாய் இறந்திருக்கிறார்கள் என்றும் சொன்னார். ஆனாலும் முன்பு இறந்த மாணவ, மாணவிகளின் பெற்றோரைச் சென்று விசாரித்தபோது அவர்கள் எதும் பேச மறுத்துவிட்டார்கள்.

''என் மகன் இறந்ததற்கு என்னதான் காரணம்? முன்பு ஒருமுறை வீட்டுக்கு வந்திருந்த என் மகன் மயில்வாகனன், 'அப்பா நான் கிறிஸ்துவ மதத்திற்கு மாறிவிட்டால், என்னை வெளிநாட்டில் படிக்க வைப்பதாக அண்ணாச்சி சொல்கிறார்!' என்றான். அண்ணாச்சி என்பவர் பள்ளி மானேஜர் முத்தையாவின் மகன் எட்வர்ட் ராஜ். முன்பு வக்கீலாக இருந்த இவர் இப்போது அத்தொழிலை விட்டு விட்டுப் பள்ளி நடத்துவதில் தந்தையோடு இணைந்து செயல்படுகிறார். நான் அப்படியெல்லாம் மதம் மாறக் கூடாதென்று மறுத்துவிட்டேன்.

''பிறகு அவன் ஏழாம் வகுப்பில் ஃபெயில் ஆகிவிட்டதால், சரி வேறு பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிடலாம் என நினைத்து, ரெகார்ட் ஷீட் வாங்கி வரச் சொன்னேன். அதற்கு அவர்கள், 'அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். இங்கேயே படி. உன் அப்பாவிடமிருந்து பிரிந்து வாழ்வதாகவும் அதனால் மிகவும் கஷ்டப்படுவதாகவும் உன் அம்மாவிடம் எழுதி வாங்கிக் கொண்டு வா. இங்குள்ள அநாதை விடுதியிலேயே உன்னைச் சேர்த்துக் கொள்கிறோம்' என்று சொல்லி அனுப்பினார்கள். நானும் வறுமை காரணமாக என் மனைவி ஜானகியை அப்படி எழுதித் தரச் சொன்னேன். அவளும் தந்தாள். அதன்



மானேஜர் முத்தையா

பிறகு மங்களாபுரத்தில் உள்ள அப்பள்ளிக்கூட ஹாஸ்டலிலேயே தங்கிப் படித்தான். அப்போதுதான் இப்படி இறந்துவிட்டான்.

''அவன் இறந்தது கடந்த 26.8.85 அன்று இரவு. ஆனால் இன்றுவரை எனக்கு போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டே கொடுக்கப்படவில்லை. நானும், அதற்காகப் பிரேதப் பரிசோதனை செய்த டாக்டர் சுவாமிதாஸிடமும் கடையநல்லூர் எஸ்.ஐ. நவநீதகிருஷ்ணனிடமும் அலையோ அலையென்று அலைந்து சலித்துவிட்டேன். இவரைக் கேட்டால் அவர் என்கிறார். அவரைக் கேட்டால் இவர் என்கிறார். ஒருமுறை எஸ்.ஐ. நவநீதகிருஷ்ணனிடம், விடாப்பிடியாகக் கேட்டபோது, ''நீ போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டை வாங்கி என்னய்யா செய்யப் போறே? கேஸா போடப் போறே? ஏதோ பெயர் தெரியாத விஷத்தைக் குடிச்சுட்டுச் செத்துட்டானாம். போ!' என்று என்னை விரட்டிவிட்டார். எங்களுக்கு வேறு வழி தெரியவில்லை. என் மகன் இறந்த காரணம் எங்களுக்குத் தெரிந்தே ஆக வேண்டும். அதற்காகத்தான் கல்கிக்கு எழுதினோம். நீங்கள்தான் எங்களுக்கு உதவ வேண்டும்!'' என்றார் தென்காசி தாலுகாவிலுள்ள தனி மேலநீலியான் கிராமத்தில் வசிக்கும் ராஜரத்தினம். அருகிலிருந்த அவர் மனைவி ஜானகி, மகனை இழந்த சோகத்தில் விசித்து விசித்து அழுது கொண்டிருந்தார்.

**நா**ங்கள் அவர்கள் தரப்பு வாதத்தைக் கேட்டுக் கொண்டு அருகிலிருக்கும் மங்களாபுரம் சென்று பள்ளியின் மானேஜர் – கரஸ்பாண்டெண்ட் முத்தையாவையும் அவர் மகன் எட்வர்ட் ராஜையும் சந்தித்துக் கேட்டோம். அவர்கள் மனம் பதைத்துப் போய்விட்டார்கள்.

''எங்களுக்குச் சேவை செய்வதுதான் லட்சியமே தவிர, மதம் மாற்றுவதென்பதையெல்லாம் நாங்கள் நினைத்துக் கூடப் பார்த்தது கிடையாது. இத்தனை குற்றச்சாட்டுகளைச் சொல்லும் இறந்து போன மயில்



© வார்டன் முத்தையா

வாகனனின் தந்தை ராஜரத்தினம் எங்கள் பள்ளியில் படித்தவர்தான். மகனின் இறப்பைக் காரணமாக வைத்து எங்களிடமிருந்து பணம் கறப்பதற்குத்தான் இப்படிச் சொல்கிறார். வேறொன்றுமில்லை. வேண்டுமானால் ஹாஸ்டல் வார்டனை வரச் சொல்கிறோம் விசாரித்துப் பாருங்கள். ராஜரத்தினம் அன்று காலை தன் மகனை அடித்துவிட்டார். அதனால்தான் அவன் அரளி விதை சாப்பிட்டுத் தற்கொலை செய்து கொண்டான். வேறு எதுவுமே இல்லை. இதுதான்



உண்மை....'' என்றார்கள்.

வார்டன் முத்தையா வந்தார். ''சார், நான் வழக்கமாக இரவு ஒன்பது மணி வரை ஹாஸ்டல் மாணவர்களுக்கு 'ஸ்டடி கிளாஸ்' எடுத்துவிட்டுப் பிறகுதான் வீட்டுக்குச் செல்வேன். அப்படிச் சென்றபோதுதான் வீட்டுக்கு வந்த மாணவர்கள், 'மயில்வாகனன் அரளி விதை சாப்பிட்டுவிட்டான் சார்!' என்றார்கள். நான் உடனே போய்ப் பார்த்தேன். பிறகு நாங்கள் அவனை உடனடியாகக் கடையநல்லூர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றோம்... இதுதான் நடந்தது!'' என்றார் வார்டன் முத்தையா.

''அவன் அரளி விதைதான் சாப்பிட்டிருக்கிறான் என்பது உங்களிடம் வந்து சொன்ன மாணவர்களுக்கு எப்படித் தெரிந்திருந்தது?''

''அவன் மாலையே ஒருமுறை அரளி விதை சாப்பிட முயற்சி செய்தபோது ஒரு மாணவன் அவனைத் தடுத்திருக்கிறான் சார். அப்போது தடுக்கப்பட்டுவிட்டதால், இரவில் சாப்பிட்டிருக்கிறான்.''

''மாலையிலேயே அவன் அரளி விதை சாப்பிட முயற்சி செய்தது பற்றி அப்போதே யாரும் வந்து உங்களிடம் சொல்லவில்லையா?''

''சொல்லவில்லை சார். இரவுதான் வந்து சொன்னார்கள்.''

''இரவு வந்து சொன்னபோது எத்தனை மணி இருக்கும்?''

''சுமார் எட்டரை மணி இருக்கும் சார்.''

''நீங்கள் வழக்கமாக ஒன்பது மணிக்குத்தானே ஸ்டடி கிளாஸ் முடிந்து செல்வீர்கள்!''

''அன்று வீட்டுக்கு விருந்தாளிகள் வந்திருந்ததால் முன்னாடியே போய்விட்டேன் சார்!'' என்றார் வார்டன் முத்தையா.

சரியென்று கடையநல்லூர் அரசு மருத்துவமனைக்குச் சென்று மயில்வாகனின் பிரேதத்தைப் பரிசோதனை செய்த டாக்டர் சுவாமிதாஸைச் சந்தித்துக் கேட்டோம்.

சுமார் அரைநிமிடம் மௌனமாக இருந்த அவர், ''நான் எப்படி போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் தர முடியும்? அதெல்லாம் மாஜிஸ்ட்ரேட்டுக்கு விண்ணபித்துத்தானே வாங்க வேண்டும்!'' என்றார்.

''எல்லாமே சரி, உங்களிடம் பலமுறை போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டுக்காக வந்து அலைந்த ராஜரத்தினத்திடம், மாஜிஸ்ட்ரேட்டுக்கு விண்ணப்பித்துத்தான் அதைப் பெற முடியும் என்று ஒரே வரியில் சொல்லியிருக்கலாமே! ஏன் சொல்லவில்லை?'' என்று கேட்டபோது, மௌனத்தைத் தவிர அவரிடமிருந்து வேறு எந்தப் பதிலும் வரவில்லை.

இறுதியாக கடையநல்லூர் எஸ்.ஐ. நவநீதகிருஷ்ணனைச் சந்திக்க முயற்சி செய்தோம். ஆனாலும் முடியவில்லை.

நாம் விசாரித்த வரையில் சிறுவன் மயில்வாகனனுடைய மரணத்தில் இன்னமும் விடை காணப்படாத பல சந்தேகக் கேள்விகள் எழத்தான் செய்கின்றன. அவற்றுள் மகனின் மரணத்துக்கு உண்மைக் காரணம் அறிய முயலும் தந்தைக்கு போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட் கூடத் தரப்படாமல் மறுக்கப்படுவது பெரிய அநீதியாகத் தோன்றுகிறது. குற்றம் நடக்குமிடத்தில் கடுமை காட்ட வேண்டிய காவல்துறை, சராசரிக் குடிமகனிடம் கருணை காட்டவும் கற்க வேண்டும். இந்த நியதி தலைகீழாக மாறுமானால் தமிழகத்துக்கு விமோசனமே இல்லை!

— பிரின்ஸ்

# வீட்டுக்கார சொர்ணத்தாச்சி

வண்ணநிலவன்

"என்னடா இந்தப்பொம்பளே இத்தனை கண்டிஷன் போடுதாளேன்னு வருத்தப்படாதீய..... எதையுமே கறாராப் பேசிக்கிறது ஒங்களுக்கும் நல்லது. எனக்கும் நல்லது. என்ன சொல்லுதீய?"

"சரிதான்... சொல்லுங்க..."

"பம்பு அடிக்கும்போது மெதுவா அடிக்கணும். தக்குபுக்குன்னு அடிக்கக் கூடாது. பம்புக்கு வாஸர் போடணும்னு வாடகைக்குக் குடியிருக்கவுஹதான் துட்டுப் போட்டு வாஸர் வாங்கிப் போடணும்.... என்ன சொல்லுதீய?"

"சரி..... சொல்லுங்க....."

"ராத்திரி ஒம்பது மணிக்கி யாரா இருந்தாலும் வீட்டுக்குள்ள வந்திரணும். சரியா ஒம்பதுன்னு ஒம்பதுக்குத் தலைவாசல் கதவச் சாத்திடுவேன். அப்புறமா அம்மான்னாலும் முடியாது. அய்யான்னாலும் தொறக்க முடியாது.... கதவைத் தாழ்ப்பாள் போட்டு, சாவியை நான்தான் வச்சிருப்பேன்..."

"ஒம்பது மணிக்கே வெளிக் கதவைப் பூட்டிடுவீங்களா? ஒரு அஞ்சு பத்து நிமிசம் லேட்டா வந்தாக்கூடக் கதவத் தொறக்க மாட்டீங்களா?"

"அதுதானய்யா இத்தனை நேரமும் சொல்லுதேன்... விடிய விடிய ராமாயணம் கேட்டுட்டு, சீதைக்கி ராமன் சித்தப்பான்னு கதையிலலா பேசுதீய.... என்ன சொல்லுதீய?"

"சரி சொல்லுங்கம்மா...."

"வீட்டுக்குள்ள கண்ட எடத்துலயும் ஆணி அடிக்கக் கூடாது. விறகு அடுப்பு வச்சு சமையல் பண்ணக் கூடாது.... சமையல் கட்டுலே ஒரு பொட்டுக் கரியைப் பார்த்தாலும் எனக்குப் புடிக்காது.... என்ன சொல்லுதீய?"

"சொல்லுங்கம்மா...."

"என்னு எல்லாத்தையும் நீங்க குடி வர்றதுக்கு முன்னாலேயே பேசிக்கிட்டா ஒங்களுக்கும் நல்லது எனக்கும் நல்லது பாருங்க... என்ன சொல்லுதீய?"

சொர்ணத்தாச்சி நாலு வார்த்தைக்கு ஒரு வார்த்தை 'என்ன சொல்லுதீய?' 'என்ன சொல்லுதீய?' என்று எதிரே இருப்பவரைப் பார்த்துக் கேட்டுக் கொள்வாள். அப்படியொரு பழக்கம்.

"சொல்லுங்கம்மா..."

"ஆங்.... சொல்ல மறந்துட்டேனே... துணிமணிகளை மொட்டை மாடியிலே கொண்டு போயிக் காயப் போடக் கூடாது. மொட்டை மாடிக்கி யாரும் போகவே கூடாது. வத்தல் போடுதேன்; துணி காயப் போடுதேன்.... வீட்டுக்கு வந்த விருந்தாளிகளைப் படுக்க வைக்கேன்னு ஆரம்பிச்சிரக் கூடாது... என்ன சொல்லுதீய?"

"..............."

"இத்தனை கண்டிஷனுக்கும் ஒத்து வர்றதா இருந்தா மவராசனா வாங்க... ம்... சொல்ல மறந்துட்டேனே விருந்து கிருந்துன்னு ஊர்லாம் பட்ட ஆட்களை வீட்டுக்குள்ள அடைச்சு வச்சிரப்படாது.... ஏதோ ஒரு ஆளு, ரெண்டு ஆளு வந்தாப் பரவாயில்லை. அதுவும் மிஞ்சி மிஞ்சிப் போனா ஒரு மூணு நாளு தங்கியிருக்கலாம். ஒரேயடியா மாசக் கணக்கிலே டேராப் போட்டு உக்காந்தா நீங்கதான் அடுத்த மாசமே வீட்டைக் காலி பண்ணணும். என்ன சொல்லுதீய?"

"சரிம்மா.... சொல்லுங்க..."

"என்னடா, இந்த வீட்டுக்கார ஆச்சி கண்டிசன் மேல கண்டிசனாப் போடுதாளேன்னு பாக்காதீய.... நாளையும் பின்னையும் நீங்களும் நல்லா இருக்கணும், நானும் நல்லா இருக்கணும் பாருங்க.... எனக்கு இந்த வீட்டு வாடகை வந்துதான் வயிறு நெறையணும்கிறது இல்லை. எம் மவன் மிலிட்டரியிலே இருக்கான். எங்க வீட்டு அய்யா நயினாகுளம் பக்கத்துலே நாலு மரக்கா வெதைப்பாடும், பேங்குல ரெண்டு லட்சத்திச் சொச்சம் ரூபாயும் விட்டுட்டுத்தான் மண்டையப் போட்டாஹ... அந்த அதியாரி இருந்தாஹன்னு நான் இந்த மாதிரி வீட்டை விட்டு வெளியில வந்து நின்னு பேசுவனா? அது கெடக்கட்டும்... எங்கதை என்னோட... இத்தனை கண்டிசன் இருக்கு. சம்மதமன்னா வாருங்க... இங்க இருக்க எட்டுக் குடித்தனங்களும் இப்படித்தான் இருக்குதுஹ... என்ன சொல்லுதீய?"

"சரிம்மா.... வீட்டு வாடகை..."

"வாடகை எரநூறு ரூபா.... ரெண்டாயிர ரூபா அட்வான்ஸு.... அட்வான்ஸைப் போகும் போதுதான் திருப்பித் தருவேன்.... வீட்டைக் காலி பண்றதுன்னு ஒரு மாசத்துக்கு முந்தியே அட்வான்ஸா வீட்டைக் காலி பண்ணப் போறேன்னு சொல்லிப் புரணும்... என்ன சொல்லுதீய....?"

அந்தப் பக்கம் பதில் இல்லை. சிறிது நேர மௌனத்துக்குப் பின்னர்: "அட்வான்ஸ் தான் கொஞ்சம்...."

"அய்யா அதான் சொல்லிட்டனே,

காலணுக் கூட கொறைக்கதுக்கு இல்ல... இஷ்டம்னு வாங்க.... என்ன சொல்லுதீய?''

''ரொம்பச் சரிங்க... நல்ல நாள் பாத்து வந்துடறோம். நாளைக்கிக் காலம்பற அட்வான்ஸ் தந்துடறோம்.''

''சொல்லுதனேன்னு கோச்சுக்கிடாதீய. நீங்க அட்வான்ஸ் தர்றதுக்கு மிந்தி ஆராவது வந்து தந்துட்டாஹன்னு அவுஹளுக்குத் தான் வீடு.... பொறவு வந்து... என்ன ஆச்சி! வீட்டை விட்டுட்டீஹளான்னு கேளாதீய.... சம்மதமா....? என்ன் சொல்லுதீய?''

''சரிம்மா... காலையில எட்டு எட்டரைக் கெல்லாம் வந்து தந்திடுதோம்...''

''மவராசனுப் போயிட்டு வாங்க...''

'சொர்ணத்தாச்சி வளவு' என்கிற அந்த வீடுகளுக்குக் குடி வருகிற நபர்கள் இன்னும் பல விசித்திரமான கண்டிஷன் களுக்கும் ஆளாக வேண்டும். அந்தக் கண்டிஷன்களெல்லாம் வீட்டுக்குக் குடி வந்த பிறகு தான் அனுபவத்தில் ஒவ்வொன்றாகத் தெரிய வரும். ஆச்சியின் கெடுபிடிகளைப் பற்றித் திருநெல்வேலி டவுனில் கேள்விப்படாத ஆளே இருக்க முடியாது.

''ஐயோ, நீங்க சொர்ணத்தாச்சி வீட்டு வளவிலேயா குடியிருக்கீஹ.... அடப்பாவமே... உக்காந்தாக் குத்தம், நின்னுக் குத்தம்பானே அந்த ஆச்சி....'' என்று சொர்ணத்தாச்சி வீட்டில் குடியிருக்கிற



ஜீவன்களை, ஏதோ கூண்டுக்குள் அடைபட்டிருக்கிற சர்க்கஸ் மிருகங்களைப் பரிதாபத்துடன் பார்க்கிற மாதிரி பார்ப்பார்கள். ஆனால் ஆச்சியின் அத்தனை கெடுபிடிகளுக்கும் மசிந்து கொடுத்து, அந்த வளவில் குடியிருக்கக் காரணம் தண்ணீர் வசதி. பம்பில் எந்த நேரமும் தண்ணீர் வரும். காலையில் ஆற்றுக்குக் குளிக்கப் போவதற்கும் ரொம்பச் சௌகரியம். நெல்லையப்பர் கோவில், காய்கறி மார்க்கெட், பள்ளிக்கூடம் எல்லாம் பக்கத்தில் பக்கத்தில்தான். இந்தச் சௌகரியங்கள், சொர்ணத்தாச்சி தரும் கெடுபிடிகளை மறக்கடிக்கச் செய்து விடுகின்றன.

எல்லா வீடுகளையும் வாடகைக்கு விட்டு விட்டு சொர்ணத்தாச்சி, மாடியில் இரண்டே இரண்டு அறைகளை மட்டும் தனக்கென்று வைத்துக் கொண்டாள். ஓர் அறையில் மிலிட்டரியில் இருக்கிற அவளுடைய ஒரே மகனுடைய மிலிட்டரி டிரங்க் பெட்டிகளும், புழங்காத சாமான்களுமாகக் கிடைக்கும். இன்னோர் அறையைத்தான் புழங்கி வந்தாள்.

எல்லா வீடுகளிலுமாக இரண்டாயிரம் ரூபாய் வரை வாடகை வருகிறது என்றாலும் ஆச்சி தன் வீட்டில் சமையல் செய்வதைப் பார்க்கவே முடியாது. காலையில் மட்டும் யாராவது பையன்களை அனுப்பி ஹோட்டலில் இட்லி வாங்கிச் சாப்பிடுவாள். மதியமும், இரவுச் சாப்பாடும் அனேகமாக அங்கே வாடகைக்குக் குடியிருக்கிற குடித்தனக்காரர்கள் வீட்டிலோ அல்லது உறவினர்கள் வீட்டிலோதான் நடக்கும்.

மனிதர்களுக்கு வம்பளக்கும் பலவீனம் உண்டு என்பது ஆச்சிக்குத் தெரியும். யார் யாருக்கு எந்த மாதிரி வம்புகள் பிடிக்கும் என்பதும் ஆச்சிக்குக் கரதலப் பாடம். இரண்டாவது வீட்டில் குடியிருக்கிற கோமதி நாயகமும், அவர் பொஞ்சாதியும் சினிமா பைத்தியங்கள். அவர்கள் வீட்டிற்குப் போனால் தியாகராஜ பாகவதர் காலத்துச் சினிமாக் கிசுகிசு முதல், தற்கால நவீன சினிமாக் கிசுகிசுவரை அவிழ்த்து விடுவாள். குழாயடி வீட்டில் குடியிருக்கிற கௌரிக்கு, வேம்படித் தெருவில் குடியிருக்கிற அவள் நாத்தனாரைப் பற்றிப் பேச ஆரம்பித்தாலே போதும். சோறு தண்ணி கூட வேண்டாம். சொர்ணத்தாச்சி அவள் நாத்தனாரின் நடையுடை பாவனைகளைக் கேலி பண்ணி கௌரியை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி விடுவாள். அதற்குள் சாப்பாட்டு நேரமே வந்துவிடும்.

"ஏளா பாத்தியா.... பேசிக்கிட்டே இருந்ததுலே நேரம் காலமே தெரியலே.... இரு... போயி ரெண்டு வாயி சோத்தை அள்ளிப் போட்டுட்டு வாரேன்..." என்று மெதுவாக எழுந்திருப்பாள். தவறு, எழுந்திருக்கிறமாதிரி பாவனை செய்வாள்.

கௌரி விடுவாளா? அவள் மனத்தையெல்லாம் சர்க்கரைப் பாகாக இனிக்க வைத்து விட்டிருக்கிற ஆச்சியின் பேச்சை இன்னும் ஓர் இரண்டு மணி நேரமாவது கேட்க வேண்டாமா?

"ரெண்டு வாய்ச் சோத்தை அள்ளிப் போடறதுக்காக நீங்க மாடிப்படி ஏறி எறங்கணுமாக்கும்... அந்தச் சோத்தை இங்க உக்காந்து அள்ளிப் போட்டாத்தான் என்னவாம்..." என்று தட்டில் சாப்பாட்டை எடுத்துக் கொண்டு வந்து ஆச்சியின் முன்னால் வைத்தே விடுவாள்.

"எனக்கு மக இல்லாத குறையைத் தீர்க்கத்தான் காந்திமதி அம்மனே உன் ரூபத்திலே வந்திருக்காம்மா...." என்று சொல்லி விட்டுச் சாப்பாட்டை ஒரு பிடி பிடித்து விடுவாள்.

ராத்திரிச் சாப்பாட்டுக்கு இதேபோல் இன்னொரு கோமதி, அல்லது கோமதி நாயகத்து வீடு. அவளுக்குப் பிரியமான விஷயத்தைப் பேசி அவளைக் கிறங்கடித்துச் சாப்பாட்டை முடித்துக் கொள்வாள்.

ஆச்சிக்குத் தெரிய யாரும் அமிர்தாஞ்சனமோ, விக்ஸோ தேய்த்து விடக் கூடாது. வாசனை எந்த வீட்டிலிருந்து வருகிறது என்பதைக் கண்டுபிடித்து அவர்கள் வாங்கி வைத்திருக்கிற பாட்டில் காலியாகிற வரை அவ்வப்போது வந்து வாங்கி, தைலத்தை எண்ணெய் தேய்க்கிற மாதிரி தேய்த்துக் கொள்வாள்.

குடியிருக்கிறவர்கள் ரேடியோ வைத்திருந்தால் போச்சு. ஆச்சி ஒரு ரேடியோ பைத்தியம். ராத்திரி பத்து மணிக்கு ஒலிபரப்பாகும் நேயர் விருப்பத்தில் வாரம்தோறும் 'திருநெல்வேலிடவுன் சொர்ணத்தம்மாள்' என்கிற நேயரின் பெயர் வாசிக்கப்படுவதைக் கேட்டிருக்கிறீர்களா? அந்த நேயர் நமது வீட்டுக்கார ஆச்சியேதான். தினசரி சென்னை, திருச்சி, திருநெல்வேலி ரேடியோ நிலையங்களுக்கு, நாலாவது வீட்டில் குடியிருக்கிற அர்ஜுனனின் மகனிடம் சொல்லி, தனக்குப் பிடித்தமான சினிமாப் பாட்டுக்களை ஒலிபரப்பக் கேட்டுக் கார்டுகளைத் தட்டி விட்டுக் கொண்டே இருப்பாள். அந்தத் தெருவில் 'நேயர் விருப்ப ஆச்சி' என்றே ஆச்சிக்குப் பெயர் உண்டு.

நேயர் விருப்ப நேயராக ஆச்சி இருந்தாலும் ஆச்சியின் வீட்டில் நூறு ரூபாய் டிரான்ஸிஸ்டர் கூடக் கிடையாது. அப்படியானால் ஆச்சி எப்படித் தனக்கு விருப்பமான பாடல்கள் ஒலிபரப்பப்படுவதைக் கேட்கிறாள் என்று உங்களுக்குத் தோன்றலாம். இதிலும் ஆச்சியின் சாமர்த்தியமே தனிதான். நேயர் விருப்ப நிகழ்ச்சி இருந்தால், அதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பே சாமர்த்தியமாக வீட்டுக்குள் வந்து உட்கார்ந்து கொண்டு, நம்மை ரேடியோப் போட வைத்துவிடுவாள்.

ஆச்சியின் ரேடியோத் தொந்தரவு பொறுக்க முடியாமல் வீட்டைக் காலி செய்து கொண்டு ஓடிய குடும்பங்கள் பல. சிலர் தங்கள் வீட்டில் இருந்த ரேடியோக்களையே விற்றுவிட்டார்கள்.

எல்லா வீடுகளுக்கும் தனி மீட்டர் இருக்கிறது. என்றாலும், இரவு அகால நேரத்தில் எந்த வீட்டிலாவது விளக்கு எரிகிறதா என்று ஆச்சி மோப்பம் பிடிப்பாள். எல்லா போர்ஷன்களும் ஒடு போட்டவைதான். இதனால் வீட்டினுள் விளக்கு எரிந்தால் ஓடுகளுக்கு

** சிறந்த ஆசிரியர் மாணவன் நிலைக்கு இறங்கி வந்து, அவன் கண்களால் பார்த்து, அவன் காதுகளால் கேட்டு, அவனது அறிவாற்றலுக்கு ஏற்பப் புரிந்து கொண்டு உணர்த்தவும் செய்வார்.

# மஹாப்ரதோஷத்தின் பெருமை

ப்ரதோஷ சமயத்தில் பரமசிவனுடைய தாமரை போன்ற சரணங்களில் பூஜையை வேறு இடத்தில் மனத்தைச் செலுத்தாமல் ஏகாக்ர பக்தியுடன் எவர்கள் செய்கிருர்களோ, அவர்கள் இந்த ஜன்மாவிலேயே தனம், தான்யம், மனைவி, ஸந்நிதி, ஸௌபாக்யம், பொருள் இவைகளின் மிகுதியை நிச்சயமடைகிறார்கள்.

ப்ரதோஷ காலத்தில் மஹா கைலாச மலையிலுள்ள திருக்கோயிலில் ஸ்வர்ணமயமான ரத்ன மஞ்சத்தில் உலக மாதாவான பராசக்தியை அமரச் செய்து பரமசிவன் நர்த்தனம் செய்ய விரும்பும்பொழுது எல்லாத் தேவர்களும் பின்பற்றி பஜனம் செய்கின்றனர்.

ஸரஸ்வதி வீணை வாசிக்கின்றாள். தேவேந்திரன் புல்லாங்குழல் வாசிக்கின்றார். பிரும்ம தேவன் தாளம் போடுகின்றார். லக்ஷ்மி பின்பாட்டு பாடுகிறாள். மஹா விஷ்ணு மிருதங்கம் வாசிக்கின்றார். இவ்விதம் ப்ரதோஷ ஸமயத்தில் பரமசிவனுடைய தாண்டவத்தை தேவர்கள் சுற்றிலுமிருந்து கொண்டு சேவிக்கின்றனர்.

மஹா ப்ரதோஷ சமயத்தில் கந்தர்வர்கள், யக்ஷர்கள், பதகர்கள் (பட்சிகள்) உரகர்கள், (ஸர்ப்பங்கள்) சித்தர்கள் ஸாத்யர்கள், வித்யாதாரர்கள் மற்றுமுள்ள சிறந்த தேவர்கள் அப்ஸரஸ்திரிகணங்கள் மற்றும் மூவுலகத்திலுள்ளவர்களும் பூதவர்க்கத்துடன் பரமசிவனின் பக்கத்திலிருந்து கொண்டு சேவிக்கின்றனர்.

— ப்ரதோஷாஷ்டகம்

## பரிசு ரூ.200/-

### பொன்மொழிப்போட்டி — 7

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் தரப்பட்டுள்ளன. அவை பின் வரும் ஐந்து பேர் கூறியவை. எதை யார் சொன்னது? பொருத்தம் பார்த்து அந்தந்தப் பெயர் எதிரே பிழையின்றி எழுதி, விலாசத்துடன் கூப்பனைப் பூர்த்தி செய்து, இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்திரித்து எங்களுக்கு அனுப்புங்கள். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். உறையின் மீது 'பொன்மொழிப் போட்டி — 7' என்று அவசியம் குறிப்பிடவும்.



ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன்:

சத்யசாயி பாபா:

விவேகானந்தர்:

ராஜாஜி:

பெர்னார்ட் ஷா:

முடிவு தேதி: 4.3.87

என் பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

இடையே உள்ள இடுக்குகளின் வழியாக விளக்கு வெளிச்சம் வெளியே தெரியும்.

''ஏன.... இம்புட்டு நேரத்துலே வெளக்குப் போட்டு என்னம்மா செய்த.... வெளக்கை அணை'' என்ற ஆச்சியின் குரல் கேட்கும்.

தனக்குப் பிடிக்காத குடித்தனத்தைக் காலி செய்ய ஆச்சி கையாளும் நடவடிக்கைகள் ரொம்ப டிப்ளமேட்டிக் ஆனவை. இந்த விஷயத்தில் ராஜதந்திரிகள் எல்லாம் ஆச்சியிடம் கைகட்டி நிற்க வேண்டும்.

யார் யார் எப்படி என்பதை ஆச்சியின் கூர்மையான அறிவு அவர்களுடன் பழக ஆரம்பித்த சில தினங்களிலேயே எடை போட்டு வைத்துவிடும். ஆளுக்கு ஏற்றபடி காலி செய்யும் நடவடிக்கைகளும் இருக்கும்.

சற்றுப் படித்தவராக, விவரம் தெரிந்தவராக இருந்தால் அவர்களுக்குப் புரிகிற மாதிரி ஜாடையாகப் பேசுவது, கேலி பேசுவது, அக்கம்பக்கத்தில் உள்ளவர்களிடம் அவர்களைப் பற்றி அவதூறுகளைக் கிளப்பி விட்டு விடுவாள். அந்த வீட்டுக்காரர்கள் பம்பில் தண்ணீர் அடிக்க வந்தால், அவர்கள் காதில் விழுகிற மாதிரி, ''மனுஷாள்கள் தண்ணீர் அடிச்சா மெதுவா அடிப்பாஹ... மாடுங்க மாதிரி தண்ணீர் அடிச்சா... பம்பு எத்தனை நாளைக்கி வரும்?'' என்று சத்தம் போட்டுச் சொல்லுவாள். கொஞ்சம் உணர்வுள்ள குடித்தனக்காரர்கள் இந்த அவமரியாதைகளைச் சகிக்க முடியாமல் காலி செய்து ஓடி விடுவார்கள்.

எதற்கும் மசியாத கடோத்கஜர்களை விரட்ட ஆச்சி கையாளும் நடவடிக்கைகள் அவர்களுடைய குணத்துக்கு ஏற்ற மாதிரி இருக்கும். வீட்டுப் புரோக்கர்கள் மாதிரி, வீட்டைக் காலி செய்து தருவதற்கும் பழைய பேட்டைக்குப் பக்கத்தில் சில புரோக்கர்கள் இருக்கிறார்கள். சம்பந்தப்பட்ட குடித்தனக்காரர்கள் வேலைக்குப் போய்விட்டுத் திரும்புகிற வழியில், குடித்துவிட்டு, அவர்களை வம்புச் சண்டைக்கு இழுப்பார்கள். ஒருத்தன், ''ஆச்சி வீட்டிலே இருந்துக்கிட்டு காலி பண்ண மாட்டேங்கிறியா ராஸ்கல்...'' என்று சத்தம் போடுவான். இதற்கும் மசியாத ஆட்களை வீட்டுக்குள் புகுந்து சாமான்களை எடுத்துப் போட்டு விரட்டி விடுவார்கள்.

''ஆச்சி.... ஆச்சி.... யாரோ ஒங்க வளவுலே வீடு வாடகைக்கு இருக்குதுன்னு சொன்னாஹ.... வீடு கிடக்குதா ஆச்சி....'' என்று விசாரிக்கிறார்கள்.

''ஆரு....? அடே ராமய்யாவா, ஒனக்கு இல்லாத வீடாப்பா... வா.... வீட்டை வந்து பாரு.... புடிச்சிருக்குதா பாரு.... அப்புறமா வாடகையைப் பத்திப் பேசுவோம். செத்த மிந்திக் கூட ஒருத்தர் வந்து பாத்துட்டுப் போனாரு. நீயும் பா— .. யாரு மிந்தி அட்வான்ஸ் தாரீஹளே 'வுஹளுக்குத்தான் வீடு.... என்ன ெ .த?''

# சாதாரண நாட்களில் குற்றாலம்...



• திருநீற்றுக் கோடாய் அருவி

அரும் பச்சையான கம்பளி நடுவில் நேராகத் திருநீற்றுக் கோடாய் – மலைப் பின்னணியில் அருவி விழுவதைப் பார்க்கும்போதே கொஞ்சம் ஜில். தலையை நுழைத்தாலோ ஜில்ல்ல்ல்.... குளிர்ச்சி மொய்த்து விடுகிறது; கொஞ்சலாய் நாலு கனமான ஆசாமிகள் அடித்த மாதிரியும் இருக்கிறது. கொஞ்ச நேரம்தான் இப்படி. பிறகு ஒரு 'ஹச்' பலமாய்ப்புறப்படுகிறவரை,பெரியவர்களிலிருந்து சிறிசுகள்வரை அருவியோடு நெருக்கமானது மாதிரி ஒட்டிக் கொள்கிறார்கள்; வெளி வந்த சில நிமிஷங்களுக்குப் பற்கள் தன்னிச்சையாய்க் கதறுகின்றன.

சீசனில் இரைச்சலாகவும், மற்ற காலங்களில் மெல்லிசாகவும் 'வால்யூமை' ஏற்றி இறக்கிக் கொள்ளும் அருவிக்கு மனுஷ பேதம் தெரியப் போவதில்லை என்றாலும் நமக்குத் தெரியுமே. அதனால் அருவி விழுகிற' இடத்தை ஆண்களுக்கு, பெண்களுக்கு என்று பிரித்து வலுவான கம்பிச் சுவர் கட்டி, இரண்டு போலீஸ்காரர்கள் வேறு காவல் இருக்கிறார்கள். மெயின் அருவி, ஏறத்தாழ எண்பதடி ஆழமாயிருக்கிற 'பொங்குமாங் கடல்' பள்ளத்தில்விழுந்துததும்பி வழிகிறது. போர்டுகள் 'ஜட்டியுடன் திரியக் கூடாது' என்று கடுமையான வெயிலில் எச்சரித்துக் கொண்டிருக்கின்றன.

திரிகூடமலையின் ராசியோ என்னவோ? பழனியில் சித்த வைத்திய நிலையங்கள் மாதிரி குற்றாலத்தைச் சுற்றி அநேகமான நோய்ச் சிகிச்சை நிலையங்கள். காலையில் அருவியில் குளிக்க யூனிபார்ம் நோயாளிகள் வரிசை ஒன்று கிளம்புகிறது. ஆனால் இதையெல்லாம் பற்றிக் கவலைப்படாமல் சீசன் சமயத்தில் வசவசவென்று கூட்டம்.

ஒரு வாரம் லீவு போட்டுவிட்டு, மனமாரக் காலையில் சாப்பிட்டுவிட்டு ஒரு குளியல்; பிறகு மட்டன் வகையறாக்களை விழுங்கி விட்டுத்திரும்பவும் ஒரு குளியல். அருவிக்குத் தாற்காலிகமான தடைகள் மாதிரி தலையை நுழைத்து, தலையிலிருந்து தொப்பை வழி அருவி வழிவதைச் சிலிர்ப்போடு கண் கொள்ளாமல் பார்த்து, மனுஷர்களுக்கு ஒரு வாரம் 'சொர்க்க வாசனை!'

அருவிக்குப் பக்கத்திலேயே விரவியிருக்கிற கடைகளில் சிறிது ஆச்சர்யம். கத்திகள், அரிவாள்களுக்கென்றே தனிக் கடைகள். பதமான நீண்ட அரிவாள்கள். அழுத்தினால் விசுக்கென்று சீறுகிற பட்டன் கத்திகள், உருத்திராட்சப் பிடி போட்ட கத்திகள் என்று பரப்பினபடி ஐந்து கடைகளுக்கு மேல், அடுத்தடுத்து. 'தினசரி இரண்டாயிரம் ரூபாய்க்கு விற்பனை என்று சிரித்த முகத்தோடு சொல்கிறார்கள் வியாபாரிகள். ஒருவேளை, மன்ற மறவர்கள் கூட்டம் குளித்து முடித்து 'ப்ரெஷ்'ஷாக வாங்கிக் கொண்டு போகிறதா?



• கத்திக்கடை

இதெல்லாம் இருந்தாலும், கோயிலிலிருந்து அருவிக்குப் போகிற வழியில் நெரிசலாய் ஏன் இவ்வளவு கடைகள்? வேறிடத்துக்கு மாற்றினால் நெரிசல் இல்லாமல், அருவிக்குப் போகிற பாதை 'பளிச்'சென்று இருக்கும். அதோடு அருவிக்குப் பக்கத்திலேயே அசிங்கம் பண்ணி, அங்கேயே குளித்தும் நகர்கிறவர்களைக் கொஞ்சம் கண்காணிக்கலாம். அப்புறமென்ன?

சின்ன ஒடுக்கமான அறைகளில், பக்கெட்டுகளில், அளவான நீரோடு அவசரக் குளியல் குளிக்கும் டவுன்வாசிகளுக்கு மிகவும் பிடித்துப் போகும் இந்த அநாயாசமான 'நேச்சுரல் ஷவர் பாத்.

—யூகி



# பொன்னியின்

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## வளர்பிறைச் சந்திரன்



ளவரசிகளின் ரதம் கண்ணுக்கு மறைந்த பிறகு, ஜோதிடர் வந்தியத்தேவனை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். தம்முடைய ஆஸ்தான பீடத்தில் அமர்ந்தார். சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருந்த அவ்வாலிபனையும் உட்காரச் சொன்னார். அவனை ஏற இறங்கப் பார்த்தார்.

"தம்பி! நீ யார்? எங்கே வந்தாய்?" என்று கேட்டார்.

வந்தியத்தேவன் சிரித்தான்.

"என்னப்பா சிரிக்கிறாய்?"

"இல்லை, தாங்கள் இவ்வளவு பிரபலமான ஜோதிடர்; என்னைக் கேள்வி கேட்கிறீர்களே? நான் யார், எதற்காகத் தங்களிடம் வந்தேன் என்று ஜோதிடத்திலேயே பார்த்துக் கொள்ளக் கூடாதா?"

"ஓகோ! அதற்கென்ன? பார்த்துக் கொள்கிறேன். ஆனால் எனக்கு நானே ஜோசியம் பார்த்துக் கொண்டால், தட்சணை யார் கொடுப்பார்கள் என்றுதான் யோசிக்கிறேன்."

வந்தியத்தேவன் புன்னகை செய்துவிட்டு, "ஜோதிடரே! இப்போது இங்கே வந்துவிட்டுப் போனார்களே? அவர்கள் யார்?" என்று கேட்டான்.

"ஓ! அவர்களா! நீ யாரைப் பற்றிக் கேட்கிறாய் என்று எனக்குத் தெரிகிறது. தெரியும், தம்பி, தெரியும்! நீ என் சீடனைப் பிடித்து இழுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தபோது இங்கே இருந்தார்களே, அவர்களைப் பற்றித்தான் கேட்கிறாய்? இல்லையா? ரதத்தில் ஏறிக் கொண்டு, பின்னால் புழுதியைக் கிளப்பிவிட்டுக் கொண்டு போனார்களே? அவர்களைப் பற்றித்தானே?" என்று குடந்தை ஜோதிடர் சுற்றி வளைத்துக் கேட்டார்.

"ஆமாம், ஆமாம்! அவர்களைப் பற்றித்தான் கேட்டேன்..."

"நன்றாகக் கேள். கேட்க வேண்டாம் என்று யார் சொன்னது? அவர்கள் இரண்டு பேரும் இரண்டு பெண்மணிகள்!"

"அது எனக்கே தெரிந்து போய்விட்டது, ஜோதிடரே! நான் குருடன் இல்லை. ஆண்களையும் பெண்களையும் நான் வித்தியாசம் கண்டுபிடித்து விடுவேன். பெண் வேடம் பூண்ட ஆணாயிருந்தால்கூட எனக்குத் தெரிந்து போய்விடும்."

"பின்னே, என்ன கேட்கிறாய்?..."

"பெண்கள் என்றால், அவர்கள் இன்னார், இன்ன ஜாதி......"

"ஓகோ! அதையா கேட்கிறாய்? பெண்களில் பத்மினி, சித்தினி, காந்தர்வி, வித்யாதரி என்பதாக நாலு ஜாதிகள் உண்டு. — உனக்குச் சாமுத்ரிகா லட்சண சாஸ்திரத்தில் கொஞ்சம் பயிற்சி இருக்கும் போலிருக்கிறது. — அந்த நாலு ஜாதிகளில் இவர்கள் பத்மினி — காந்தர்வி — ஜாதிகளைச் சேர்ந்தவர்கள்......"

"கடவுளே!......"

"ஏன் அப்பனே!"

"கடவுளை நான் கூப்பிட்டால், நீங்கள் 'ஏன்?' என்று கேட்கிறீர்களே?"

"அதில் என்ன பிசகு? கடவுள் சர்வாந்தர்யாமி என்று நீ கேட்டதில்லையா? பெரியவர்களுடைய சகவாசம் உனக்கு அவ்வளவாகக் கிடையாது போலிருக்கிறது! எனக்குள்ளே இருப்பவரும் கடவுள்தான். உனக்

# செல்வன்



குள்ளே இருப்பவரும் கடவுள்தான். நீ இழுத்துக் கொண்டு உள்ளே வந்தாயே, அந்த என் சீடனுக்குள்ளே இருப்பவரும் கடவுள்தான்......''

''போதும்,போதும்,நிறுத்துங்கள்.''

''இத்தனை நேரம் பேசச் சொன்னதும் கடவுள்தான்; இப்போது நிறுத்தச் சொல்வதும் கடவுள்தான்!''

''ஜோதிடரே! இப்போது இங்கேயிருந்து போனார்களே, அந்தப் பெண்கள் யார், எந்த ஊர், என்ன குலம், என்ன பெயர், — என்று கேட்டேன். சுற்றி வளைக்காமல் மறுமொழி சொன்னால்......''

''சொன்னால், எனக்கு நீ என்ன தருவாய், அப்பனே!''

''என் வந்தனத்தைத் தருவேன்.''

''உன் வந்தனத்தை நீயே வைத்துக் கொள். ஏதாவது பொன் தனம் கொடுப்பதாயிருந்தால் சொல்லு!''

''பொன் தனம் நான் கொடுத்தால், நிச்சயமாய்ச் சொல்லுவீர்களா?''

''அதுவும் சொல்லக் கூடியதாயிருந்தால்தான் சொல்லுவேன். தம்பி! இதைக் கேள். ஜோதிடன் வீட்டுக்குப் பலரும் வந்து போவார்கள். ஒருவரைப் பற்றி இன்னொருவரிடம் சொல்லக் கூடாது. இப்போது போனவர்களைப் பற்றி உன்னிடம் சொல்ல மாட்டேன். உன்னைப் பற்றி வேறு யாராவது கேட்டால் அவர்களுக்கும் உன்னைப் பற்றி ஒரு வார்த்தை கூடச் சொல்ல மாட்டேன்.''

''ஆகா! ஆழ்வார்க்கடியார் நம்பி தங்களைப் பற்றிச் சொன்னது முற்றும் உண்மைதான்.''

''ஆழ்வார்க்கடியாரா? அவர் யார் அப்படி ஒருவர்?''

''தங்களுக்குத் தெரியாதா, என்ன? ரொம்பவும் தங்களைத் தெரிந்தவர் போல் பேசினாரே? ஆழ்வார்க்கடியார் நம்பி என்று கேட்டதேயில்லையா?''

''ஒருவேளை ஆளைத் தெரிந்திருக்கும்; பெயர் ஞாபகம் இராது. கொஞ்சம் அடையாளம் சொல்லு, பார்க்கலாம்!''

''கட்டையாயும், குட்டையாயும் இருப்பார். முன் குடுமி வைத்திருப்பார். இளந்தொந்தியில் வேட்டியை இறுக்கிக் கட்டியிருப்பார். சந்தனத்தைக் குழைத்து உடம்பெல்லாம் கீழிருந்து மேலாக இட்டிருப்பார். சைவர்களைக் கண்டால் சண்டைக்குப் போவார். அத்வைதிகளைக் கண்டால் தடியைத் தூக்குவார். சற்று முன்னால், 'நீயும் கடவுள் நானும் கடவுள்' என்றீர்களே, இதை ஆழ்வார்க்கடியார் கேட்டிருந்தால் 'கடவுளைக் கடவுள் தாக்குகிறது!' என்று சொல்லித் தடியினால் அடிக்க வருவார்......''

''தம்பி! நீ சொல்லுவதையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், திருமலையப்பனைப் பற்றிச் சொல்லுகிறாய் போலிருக்கிறது......''

''அவருக்கு அப்படி வெவ்வேறு பெயர்கள் உண்டா?''

''ஊருக்கு ஒரு பெயர் வைத்துக் கொள்வார் அந்த வீர வைஷ்ணவர்.''

''ஆளுக்குத் தகுந்த வேஷமும் போடுவாராக்கும்!''

''ஆகா! சமயத்துக்குத் தகுந்த வேஷமும் போடுவார்.''

''சொல்லுவதில் கொஞ்சம் கற்பனையும் பொய்யும் கலந்திருக்குமோ?''

''முக்காலே மூன்றரை வீசம் பொய்யும்கற்பனையும்இருக்கும். அரை வீசம் உண்மையும் இருக்கலாம்.''

''ரொம்பப் பொல்லாத மனிதர் என்று சொல்லுங்கள்!''

''அப்படியும் சொல்லிவிட முடியாது. நல்லவர்க்கு நல்லவர்; பொல்லாதவர்க்குப் பொல்லாதவர்.''

''அவருடைய பேச்சை நம்பி ஒன்றும் செய்ய முடியாது.''

''நம்புவதும் நம்பாததும் அந்தந்தப் பேச்சைப் பொறுத்திருக்கிறது......''

**அமரர் கல்கி**

"உதாரணமாக, தங்களிடம் போய் ஜோசியம் கேட்டால் நல்லபடி சொல் வீர்கள் என்று அவர் கூறியது......"

"அவர் பேச்சில் அரை வீசம் உண் மையும் இருக்கும் என்றேனே, அந்த அரை வீசத்தில் அது சேர்ந்தது."

"அப்படியானால், எனக்கு ஏதாவது ஜோதிடம், ஆரூடம் சொல்லுங்கள், நேரமாகிவிட்டது. எனக்குப் போக வேண்டும், ஐயா!"

"அப்படி அவசரமாக எங்கே போக வேண்டும், அப்பனே!"

"அதையும் தங்கள் ஜோசியத்தில் பார்த்துச் சொல்லக் கூடாதா? எங்கே போக வேண்டும், எங்கே போகக் கூடாது, போனால் காரியம் சித்தி யாகுமா என்பதைப் பற்றியெல்லாந் தான் தங்களைக் கேட்க வந்தேன்."

"ஜோசியம், ஆரூடம் சொல்வதற் கும் ஏதாவது ஆதாரம் வேண்டும், அப்பனே! ஜாதகம் வேண்டும்; ஜாதகம் இல்லாவிடில், பிறந்த நாள் நட்சத்திரமாவது தெரிய வேண்டும்; அதுவும் தெரியாவிடில், ஊரும் பேரு மாவது சொல்ல வேண்டும்."

"என் பெயர் வந்தியத்தேவன்!"

"ஆகா! வாணர் குலத்தவனா?"

"ஆமாம்."

"வல்லவரையன் வந்தியத்தேவனா?"

"சாக்ஷாத் அவனேதான்!"

"அப்படிச் சொல்லு, தம்பி! முன் னமே சொல்லியிருக்கக் கூடாதா? உன் ஜாதகம்கூட என்னிடம் இருந் ததே! தேடிப் பார்த்தால் கிடைக்கும்."

"ஓஹோ! அது எப்படி?"

"என்னைப் போன்ற ஜோதிடர் களுக்கு வேறு என்ன வேலை? பெரிய வம்சத்தில் பிறந்த பிள்ளைகள் — பெண்கள், இவர்களுடைய ஜாதகங் களையெல்லாம் சேர்த்து வைத்துக் கொள்வோம்......"

"நான் அப்படியொன்றும் பெரிய வம்சத்தில் பிறந்தவன் அல்லவே......"

"நன்றாகச் சொன்னாய்? உன்னு டைய குலம் எப்பேர்ப்பட்ட குலம்? வாணர் குலத்தைப் பற்றிக் கவி வாணர்கள் எவ்வளவு கவிகளையெல் லாம் பாடியிருக்கிறார்கள்? ஒருவேளை நீ கேட்டிருக்க மாட்டாய்!"

"ஒரு கவியைத்தான் சொல்லுங் களேன், கேட்கலாம்."

ஜோதிடர் உடனே பின்வரும் பாடலைச் சொன்னார்:—

"வாணன் புகழுரையா
வாயுண்டோ மாகதர்கோன்
வாணன் பெயரெழுதா
மார்புண்டோ — வாணன்
கொடிதாங்கி நில்லாத
கொம்புண்டோ உண்டோ
அடிதாங்கி நில்லா
அரசு!"

ஜோதிடர் இசைப்புலவர் அல்ல வென்பது அவர் பாடும்போது வெளி யாயிற்று. ஆயினும் பாடலைப் பண் ணில் அமைத்து மிக விளக்கமாகவும் உருக்கமாகவும் பாடினார்.

"கவி எப்படியிருக்கிறது?" என்று கேட்டார்.

"கவி காதுக்கு இனிமையாகத்தான் இருக்கிறது. ஆனால் என்னுடைய கொடியை ஏதாவது ஒரு மாட்டின் கொம்பில் நானே கட்டிவிட்டால்தான் உண்டு. அரசமரத்துக் கிளைமேல் ஏறி நின்றால்தான் அரசு என் அடியைத் தாங்கும். அதுகூடச் சந்தேகம் தான். கனம் தாங்காமல் கிளை முறிந்து என்னையும் கீழே தள்ளினாலும் தள் ளும்!" என்றான் வந்தியத்தேவன்.

"இன்றைக்கு உன் நிலைமை இப்படி; நாளைக்கு எப்படி இருக்கும் என்று யார் கண்டது?" என்றார் ஜோதிடர்.

"தாங்கள் கண்டிருப்பீர்கள் என்று எண்ணி அல்லவா வந்தேன்?" என் றான் வல்லவரையன்.

"நான் என்னத்தைக் கண்டேன், தம்பி! எல்லாரையும்போல் நானும் அற்ப, ஆயுள் படைத்த மனிதன் தானே? ஆனால் கிரகங்களும் நட் சத்திரங்களும் வருங்கால நிகழ்ச்சி களைச் சொல்லுகின்றன. அவை சொல்லுவதை நான் சிறிது கண்ட றிந்து, கேட்பவர்களுக்குச் சொல் கிறேன். அவ்வளவுதான்!"

"கிரஹங்களும் நட்சத்திரங்களும் என் விஷயத்தில் என்ன சொல்லுகின்றன, ஜோதிடரே!"

"நீ நாளுக்கு நாள் உயர்வாய் என்று சொல்லுகின்றன."

"சரியாப் போச்சு! இப்போதுள்ள

உயரமே அதிகமாயிருக்கிறது. உங்கள் வீட்டில் நுழையும்போது குனிய வேண்டியிருக்கிறது! இன்னும் உயர்ந்து என்ன செய்வது? இப்படியெல்லாம் பொதுவாகச் சொல்லாமல் குறிப்பாக ஏதாவது சொல்லுங்கள்.''

''நீ ஏதாவது குறிப்பாகக் கேட்டால், நானும் குறிப்பாகச் சொல்லுவேன்.''

''நான் தஞ்சாவூருக்குப் போகிற காரியம் கைகூடுமா, சொல்லுங்கள்?''

''நீ தஞ்சாவூருக்கு உன் சொந்தக் காரியமாகப் போகிறதானால், போகிற காரியம் கைகூடும். இப்போது உனக்கு ஐயக் கிரகங்கள் உச்சமாயிருக்கின்றன. பிறருடைய காரியமாகப் போவதாயிருந்தால், அந்த மனிதர்களுடைய ஜாதகத்தைப் பார்த்துச் சொல்ல வேண்டும்!''


ந்தியத்தேவன் தலையை ஆட்டிக்கொண்டு மூக்கின் மேல் விரலை வைத்து ''ஜோதிடரே! தங்களைப் போன்ற சாமர்த்தியசாலியை நான் பார்த்ததேயில்லை!'' என்றான்.

''முகஸ்துதி செய்யாதே, தம்பி!'' என்றார் ஜோதிடர்.

''இருக்கட்டும். கேட்க வேண்டியதைத் தெளிவாகவே கேட்டுவிடுகிறேன். தஞ்சாவூரில் சக்கரவர்த்தியைத் தரிசிக்க விரும்புகிறேன். அது சாத்தியமாகுமா?''

''என்னைவிடப் பெரிய ஜோதிடர்கள் இருவர் தஞ்சாவூரில் இருக்கிறார்கள். அவர்களைத்தான் கேட்க வேண்டும்.''

''அவர்கள் யார்?''

''பெரிய பழுவேட்டரையர் ஒருவர்; சின்னப் பழுவேட்டரையர் ஒருவர்.''

''சக்கரவர்த்தியின் உடல்நிலை மிக மோசமாகியிருப்பதாகச் சொல்கிறார்களே அது உண்மையா?''

''யாராவது ஏதாவது சொல்லுவார்கள்! சொல்லுவதற்கு என்ன? அதையெல்லாம் நம்பாதே! வெளியிலும் சொல்லாதே!''

''சக்கரவர்த்திக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால், அடுத்த பட்டம் யாருக்கு என்று சொல்ல முடியுமா?''

''அடுத்த பட்டம் உனக்குமில்லை; எனக்குமில்லை! நாம் ஏன் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்?''

''அந்த மட்டில் பிழைத்தோம்!'' என்றான் வந்தியத்தேவன்.

''உண்மைதான், தம்பி! பட்டத்துக்குப் பாத்தியதை என்பது சாதாரண விஷயம் அல்ல; மிக்க அபாயகரமான விஷயம், இல்லையா?''

''ஜோசியரே! தற்சமயம் காஞ்சியில் இருக்கிறாரே, இளவரசர் ஆதித்த கரிகாலர்......''

''இருக்கிறார்; அவருடைய சார்பாகத்தானே நீ வந்திருக்கிறாய்?''

''கடைசியாகக் கண்டுபிடித்து விட்டீர்கள்; சந்தோஷம்! அவருடைய யோகம் எப்படி இருக்கிறது?''

''ஜாதகம் கைவசம் இல்லை, தம்பி! பார்த்துத்தான் சொல்ல வேண்டும்.''

''இளவரசர் மதுராந்தகரின் யோகம் எப்படி?''

''அவருடையது விசித்திரமான ஜாதகம். பெண்களின் ஜாதகத்தை ஒத்தது. எப்போதும் பிறருடைய ஆதிக்கத்துக்கு உட்பட்டிருப்பது...''

''இப்போது கூடச் சோழ நாட்டில் பெண்ணரசுதான் நடைபெறுவதாகச் சொல்கிறார்களே? அல்லி ராஜ்யத்தை விட மோசம் என்கிறார்களே?''

''எங்கே தம்பி, அப்படிச் சொல்கிறார்கள்!''

''கொள்ளிடத்துக்கு வடக்கே சொல்கிறார்கள்.''

''பெரிய பழுவேட்டரையர் புதிதாக மணம் புரிந்து கொண்ட இளைய ராணியின் ஆதிக்கத்தைப் பற்றிச் சொல்கிறார்கள் போலிருக்கிறது.''

''நான் கேள்விப்பட்டது வேறு.''

''என்ன கேள்விப்பட்டாய்?''

''சக்கரவர்த்தியின் திருக்குமாரி குந்தவைப் பிராட்டிதான் அவ்விதம் பெண்ணரசு செலுத்துவதாகச் சொல்கிறார்கள்!''






ஜோதிடர் சற்றே வந்தியத் தேவன் முகத்தை உற்றுப் பார்த்தார். சற்று முன் அந்த வீட்டிலிருந்து சென்றது குந்தவை தேவி என்று தெரிந்து கொண்டுதான் அவ்விதம் கேட்கிறானோ என்று முகத்திலிருந்து அறிய முயன்றார். ஆனால் அதற்கு அறிகுறி ஒன்றும் தெரியவில்லை.

"சுத்தத் தவறு, தம்பி! சுந்தர சோழ சக்கரவர்த்தி தஞ்சையில் இருக்கிறார். குந்தவைப்பிராட்டி பழையாறையில் இருக்கிறார். மேலும்......"

"மேலும் என்ன? ஏன் நிறுத்தி விட்டீர்கள்?"

"பகலில் பக்கம் பார்த்துப் பேச வேண்டும்; இரவில் அதுவும் பேசக் கூடாது. ஆனாலும் உன்னிடம் சொன்னால் பாதகமில்லை. இப்போது சக்கரவர்த்திக்கு அதிகாரம் ஏது? எல்லா அதிகாரங்களையும் பழுவேட்டரையர்கள் அல்லவா செலுத்துகிறார்கள்!"

இப்படிச் சொல்லிவிட்டு ஜோதிடர் வந்தியத் தேவனுடைய முகத்தை மறுபடியும் ஒரு தடவை கவனமாகப் பார்த்தார்.

"ஜோசியரே! நான் பழுவேட்டரையரின் ஒற்றன் அல்ல. அப்படிச் சந்தேகப்பட வேண்டாம். சற்று முன்னால் ராஜ்யங்களும் ராஜ வம்சங்களும் நிலைத்து நில்லாமை பற்றிச் சொன்னீர்கள். நான் பிறந்த வாணர் குலத்தையே உதாரணமாகச் சொன்னீர்கள். தயவு செய்து உண்மையைச் சொல்லுங்கள். சோழ வம்சத்தின் வருங்காலம் எப்படியிருக்கும்?"

"உண்மையாகச் சொல்லுகிறேன்; சந்தேகம் சிறிதுமின்றிச் சொல்கிறேன். ஆனி மாதக் கடைசியில் காவேரியிலும் காவேரியின் கிளை நதிகளிலும்

புதுவெள்ளம் வரும். அப்போது அது நாளுக்கு நாள் பெருகப் போகும் புது வெள்ளம் என்பது காவேரி தீரத்தில் உள்ளவர்களுக்கு நன்றாய்த் தெரியும். ஆவணி புரட்டாசி, வரையிலும் வெள்ளம் பெருகிக் கொண்டுதானிருக்கும். கார்த்திகை மார்கழியில் வெள்ளம் வடிய ஆரம்பிக்கும். இது வடிகிற வெள்ளம் என்பதும் காவேரிக் கரையில் உள்ளவர்களுக்குத் தெரிந்து போகும். சோழ சாம்ராஜ்யம் இப்போது நாளுக்கு நாள் பெருகும் புது வெள்ளத்தை ஒத்திருக்கிறது. இன்னும் பல நூறு வருஷம் இது பெருகிப் பரவிக் கொண்டேயிருக்கும். சோழப் பேரரசு இப்போது வளர்பிறைச் சந்திரனாக இருந்து வருகிறது. பௌர்ணமிக்கு இன்னும் பல நாள் இருக்கிறது. ஆகையால் மேலும் மேலும் சோழ மகாராஜ்யம் வளர்ந்து கொண்டேயிருக்கும்....."

"இத்தனை நேரம் தங்களுடனே பேசியதற்கு இந்த ஒரு விஷயம் தெளிவாகச் சொல்லிவிட்டீர்கள். வந்தனம். இன்னும் ஒரு விஷயம் மட்டும் முடியுமானால் சொல்லுங்கள். எனக்குக் கப்பல் ஏறிக் கடற்பிரயாணம் செய்ய வேண்டும் என்ற விருப்பம் ரொம்ப நாளாக இருக்கிறது......"

"அந்த விருப்பம் நிச்சயமாகக் கைகூடும். நீ சகடயோகக்காரன். உன் காலில் சக்கரம் இருப்பது போலவே ஓயாமல் சுற்றிக் கொண்டிருப்பாய். நடந்து போவாய்; குதிரை ஏறிப் போவாய்; யானை மேல் போவாய்; கப்பல் ஏறியும் போவாய்! சீக்கிரமாகவே உனக்குக் கடற்பிரயாணம் செய்யும் யோகம் இருக்கிறது."

"ஐயா! தென்திசைப் படையின் சேநாபதி, — தற்சமயம் ஈழத்திலே யுத்தம் நடத்தும் இளவரசர் அருள்மொழி வர்மரைப் பற்றித் தாங்கள் சொல்லக் கூடுமா? கிரஹங்களும் நட்சத்திரங்களும் அவரைப் பற்றி என்ன சொல்லுகின்றன?"

"தம்பி! கப்பலில் பிரயாணம் செய்வோர் திசையறிவதற்கு ஒரு காந்தக் கருவியை உபயோகிக்கிறார்கள். கலங்கரை விளக்கங்களும் உபயோகப்படுகின்றன. ஆனால் இவற்றையெல்லாம் விட, நடுக்கடலில் கப்பல் விடும் மாலுமிகளுக்கு உறுதுணையாயிருப்பது எது தெரியுமா? வடதிசையில் அடிவாரத்தில் உள்ள துருவ நட்சத்திரந்தான். மற்ற நட்சத்திரங்கள், — கிரஹங்கள் எல்லாம் இடம் பெயர்ந்து போய்க் கொண்டேயிருக்கும். ஸப்த



ரிஷி மண்டலமும் திசையாறிப் பிரயாணம்செய்யும். ஆனால்துருவ நட்சத்திரம் மட்டும் இடத்தைவிட்டு அசையாமல் இருந்த இடத்திலேயே இருக்கும். அந்த துருவ நட்சத்திரத்தைப் போன்றவர் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் கடைக்குட்டிப் புதல்வரான இளவரசர் அருள்மொழிவர்மர். எதற்கும் நிலைகலங்காத திடசித்தமுடையவர்; தியாகம்ஒழுக்கம்முதலிய குணங்களில் போலவே வீர பௌருஷத்திலும் சிறந்தவர். கல்வியறிவைப் போலவே உலக அறிவும்படைத்தவர். பார்த்தாலும் பசி தீரும் என்று சொல்லக் கூடிய பால் வடியும் களை முகம் படைத்தவர். அதிர்ஷ்ட தேவதையின் செல்வப்புதல்வர். மாலுமிகள் துருவநட்சத்திரத்தைக்குறிக்கொள்வது போல், வாழ்க்கைக் கடலில், இறங்கும் உன்போன்ற வாலிபர்கள் அருள்மொழி வர்மரைக் குறியாக வைத்துக் கொள்வது மிக்க பலன் அளிக்கும்.''

''அப்பப்பா! இளவரசர் அருள்மொழிவர்மரைப் பற்றி எவ்வளவெல்லாம் சொல்கிறீர்கள்? காதலனைக் காதலி வர்ணிப்பது போல் அல்லவா வர்ணிக்கிறீர்கள்?''

''தம்பி! காவிரி தீரத்திலுள்ள சோழநாட்டான் யாரைக் கேட்டாலும் என்னைப் போலத்தான் சொல்வான்.''

''மிக்க வந்தனம், ஜோதிடரே! சமயம் நேர்ந்தால் உங்கள் புத்திமதியின்படியே நடப்பேன்.''

''உன்னுடைய அதிர்ஷ்ட கிரகமும் உச்சத்துக்கு வந்திருக்கிறது என்று அறிந்துதான் சொன்னேன்.''

''போய் வருகிறேன், ஜோதிடரே! என் மனமார்ந்த வந்தனத்துடன் என்னால் இயன்ற பொன் தனமும் கொஞ்சம் சமர்ப்பிக்கிறேன், தயவு செய்து பெற்றுக் கொள்ள வேணும்.''

இவ்விதம் கூறி, ஐந்து கழஞ்சு பொன் நாணயங்களை வந்தியத்தேவன் சமர்ப்பித்தான்.

''வாணர் குலத்தின் கொடைத் தன்மை இன்னமும் போகவில்லை!'' என்று சொல்லிக்கொண்டு ஜோதிடர் பொன்னை எடுத்துக் கொண்டார்.

## பதினோராம் அத்தியாயம்

# ஆற்றங்கரை முதலை



டந்தை நகரிலிருந்து தஞ்சாவூர் செல்வோர் அந்தக்காலத்தில்அரிசிலாற்றங் கரையோடாவது காவேரிக் கரையின்மேலாவதுசென்று திருவையாற்றை அடைவார்கள். அங்கிருந்து தெற்கே திரும்பித் தஞ்சாவூர் போவார்கள். வழியிலுள்ள குடமுருட்டி, வெட்டாறு, வெண்ணாறு, வடவாறு நதிகளைத் தாண்ட அங்கே தான் வசதியான துறைகள் இருந்தன.

குடந்தையிலிருந்து புறப்பட்ட வல்லவரையன் முதலில் அரிசிலாற்றங் கரையை நோக்கிச் சென்றான். வழியில் அவன் பார்த்த காட்சிகள் எல்லாம் சோழநாட்டைக் குறித்து அவன் கேள்விப்பட்டிருந்ததைக் காட்டிலும் அதிகமாகவே அவனைப் பிரமிக்கச் செய்தன. எந்த இனிய காட்சியையும் முதல் முறை பார்க்கும் போது அதன் இனிமை மிகுந்து தோன்றுமல்லவா? பசும்பயிர் வயல்களும், இஞ்சி மஞ்சள் கொல்லைகளும், கரும்பு வாழைத் தோட்டங்களும், தென்னை கமுகுத் தோப்புகளும், வாவிகளும் ஓடைகளும், குளங்களும் வாய்க்கால்களும் மாறி மாறி வந்து கொண்டேயிருந்தன. ஓடைகளில் அல்லியும்குவளையும் காடாகப் பூத்துக் கிடந்தன. குளங்களில்செந்தாமரையும்வெண்தாமரையும் நீலோத்பலமும் செங்கழுநீரும் கண்கொள்ளாக் காட்சியளித்தன. வெண்ணிறக் கொக்குகள் மந்தை மந்தையாகப் பறந்தன. செங்கால் நாரைகள் ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தன. மடைகளின் வழியாகத்தண்ணீர் குபுகுபு என்று பாய்ந்தது. நல்ல உரமும் தழை எருவும் போட்டுப் போட்டுக் கன்னங் கரேலென்றிருந்த கழனிகளின் சேற்றை உழவர்கள் மேலும் ஆழமாக உழுது பண்படுத்தி



உங்களுக்கு, உங்களுடைய ஃப்ளோர் பிடிக்கவில்லையா?






மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்
நியூட்ரின்
மில்க் பிஸ்கட்ஸ்




ACIL 1009/86 Tam






மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்
நியூட்ரின்
மில்க் பிஸ்கட்ஸ்




ACIL 1009/86-Tam

# நியூட்ராமுல் சக்தி

க்ரீம் வளம்கொழிக்கும் அமுல் பால், நலம் தரும் மால்ட், இன்சுவைமிக்க கோக்கோ, ஒம்மாகும்! இளந்தின நரம்புகளுக்குத் தான் வலிவூட்டுகிறது நியூட்ராமுல். எதுவும் மிஞ்சமுடியாத சுவையிலேயே கிடைக்கிறது!

| | 1000 gms. | 500 gms. | Refil. |
|---|---|---|---|
| நியூட்ராமுல் | 37.21 | 19.29 | – |
| மால்டோவா | 43.75 | 24.65 | 22.79 |
| பூஸ்ட் | – | 24.89 | 23.06 |
| போர்ன்விடா | 47.48 | 24.67 | 22.81 |

Prices as on 1st January, 1987. Local taxes extra.







தயாரிப்பாளர் விற்பனை:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட்.,
ஆனந்த்-388 001.

## நியூட்ராமுல்

விளங்குங்கள் நியூட்ராமுல் வஸ்தாத்தாக

daCunha/GCM/135/86 TAM

ணர்கள். பண்பட்ட வயல்களில் பெண்கள் நடவு நட்டார்கள். நடவு செய்து கொண்டே, இனிய கிராமியப் பாடல்களைப் பாடினர்கள்.

கரும்புத் தோட்டங்களின் பக்கத்தில் கரும்பு ஆலைகள் அமைத்திருந்தார்கள். சென்ற ஆண்டில் பயிரிட்ட முற்றிய கருப்பங்கழிகளை வெட்டி அந்தக் கரும்பு ஆலைகளில் கொடுத்துச் சாறு பிழிந்தார்கள். கரும்புச் சாற்றின் மணமும் வெல்லம் காய்ச்சும் மணமும் சேர்ந்து கலந்து வந்து மூக்கைத் தொளைத்தன.

தென்னந்தோப்புகளின் மத்தியில் கீற்று ஓலைகள் வேயப்பட்ட குடிசைகளும் ஓட்டு வீடுகளும் இருந்தன. கிராமங்களில் வீட்டு வாசலைச் சுத்தமாக மெழுகிப் பெருக்கித் தரையைக் கண்ணாடி போல் வைத்திருந்தார்கள். சில வீடுகளின் வாசல்களில் நெல் உலரப் போட்டிருந்தார்கள். அந்த நெல்லைக் கோழிகள் வந்து கொத்தித் தின்றுவிட்டு "கொக்கரக்கோ!" என்று கத்திக் கொண்டு திரும்பிப் போயின. நெல்லைக் காவல் காத்துக் கொண்டிருந்த பெண் குழந்தைகள் அக்கோழிகளை விரட்டி அடிக்கவில்லை. 'கோழி அப்படி எவ்வளவு நெல்லைத் தின்றுவிடப் போகிறது?' என்று அலட்சியத்துடன் அக்குழந்தைகள் சோழியும் பல்லாங்குழியும் ஆடிக் கொண்டிருந்தார்கள். குடிசைகளின் கூரைகளின் வழியாக அடுப்புப் புகை மேலே வந்து கொண்டிருந்தது. அடுப்புப் புகையுடன் நெல்லைப் புழுக்கும் மணமும், கம்பு வறுக்கும் மணமும், இறைச்சி வதக்கும் நாற்றமும் கலந்து வந்தன. அக்காலத்தில் போர் வீரர்கள் பெரும்பாலும் மாமிச பட்சணிகளாகவே இருந்தார்கள். வல்லவரையனும் அப்படித்தான். எனவே அந்த மணங்கள் அவனுடைய நாவில் ஜலம் ஊறச் செய்தன.

ஆங்காங்கே சாலை ஓரத்தில் கொல்லர் உலைக்களங்கள் இருந்தன. உலைகளில் நெருப்புத்தணல் தகதகவென்று ஜொலித்தது. இரும்பைப் பட்டறையில் வைத்து அடிக்கும் சத்தம் டணார், டணார் என்று கேட்டது. அந்த உலைக்களங்களில் குடியானவர்களுக்கு வேண்டிய ஏர்க்கொழு, மண்வெட்டி, கடப்பாறை முதலியவற்றுடன், கத்திகள், கேடயங்கள், வேல்கள், ஈட்டிகள் முதலியனவையும் குப்பல் குப்பலாகக் கிடந்தன. அவற்றை வாங்கிக் கொண்டு போகக் குடியானவர்களும் போர் வீரர்களும் போட்டி போட்டுக் கொண்டு காத்திருந்தார்கள்.

சிறிய கிராமங்களிலும் சின்னஞ்சிறு கோவில்கள் காட்சியளித்தன. கோவிலுக்குள்ளே சேமங்கலம் அடிக்கும் சத்தமும், நகரா முழங்கும் சத்தமும், மந்திர கோஷமும், தேவாரப் பண்பாடலும் எழுந்தன.

மாரியம்மன் முதலிய கிராமதேவதைகளை மஞ்சத்தில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு பூசாரிகள் கரகம் எடுத்து ஆடிக் கொண்டும் உடுக்கு அடித்துக் கொண்டும் வந்து நெல் காணிக்கை தண்டினர்கள்.

கழுத்தில் மணி கட்டிய மாடுகளைச் சிறுவர்கள் மேய்ப்பதற்கு ஓட்டிப் போனர்கள். அவர்களில் சிலர் புல்லாங்குழல் வாசித்தார்கள்.

குடியானவர்கள் வயலில் வேலை செய்த அலுப்புத் தீர மரத்தடியில் உட்கார்ந்து இளைப்பாறினர்கள். அப்போது செம்மறியாடுகளைச் சண்டைக்கு ஏவி விட்டு அவர்கள் வேடிக்கை பார்த்தார்கள்.

வீட்டுக் கூரைகளின் மேல் பெண் மயில்கள் உட்கார்ந்து கூவ, அதைக் கேட்டு ஆண் மயில்கள் தோகையைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு ஜிவ்வென்று பறந்து போய் அப்பெண் மயில்களுக்குப் பக்கத்தில் அமர்ந்தன.

புறுக்கள் அழகிய கழுத்தை அசைத்துக் கொண்டு அங்குமிங்கும் சுற்றின.

பாவம்! கூண்டுகளில் அடைபட்ட கிளிகளும் மைனக்களும் கீதங்கள் இசைத்தன.

இப்படிப்பட்ட காட்சிகளையெல்லாம் பார்த்துக் களித்துக் கொண்டு வந்தியத்தேவன் குதிரையை மெள்ளச் செலுத்திக் கொண்டு சென்றான்

அவனுடைய கண்களுக்கு நிறைய வேலை இருந்தது. மனமும் இந்தப் பல வேறு காட்சிகளைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தது. ஆயினும் அவன் உள்மனத்திலே இலேசாகப் பனியினல் மூடுண்டது போல், ஒரு பெண்ணின் முகம் தெரிந்து கொண்டேயிருந்தது. ஆகா! அந்தப் பெண் அவளுடைய செவ்விதழ்களைத் திறந்து தன்

னுடன் சில வார்த்தை பேசியிருக்கக் கூடாதா? பேசியிருந்தால் அவளுக்கு என்ன நஷ்டமாகியிருக்கும்? அந்தப் `பெண் யாராயிருக்கும்? யாராயிருந் ாலும் கொஞ்சம் மரியாதை என்பது ேவண்டாமா? என்னைப் பார்த்தால் அவ்வளவு அலட்சியம் செய்வதற் குரியவனாகவா தோன்றுகிறது? அந்தப் பெண் யார் என்பதைச் சொல் லாமலே அந்த ஜோசியக் கிழவர் ஏமாற்றி விட்டார் அல்லவா! அவர் கெட்டிக்காரர்; அசாத்திய கெட்டிக் காரர். பிறருடைய மனத்தை எப்படி ஆழம் பார்த்துக் கண்டு கொள்கிறார்? எவ்வளவு உலக அனுபவத்துடன் வார்த்தை சொல்லுகிறார்? முக்கிய மான விஷயம் ஒன்றும் அவர் சொல்ல வில்லைதான்! இராஜாங்க சம்பந்த மான பேச்சுக்களில் அவர் மிகவும் ஜாக்கிரதையாக எதுவும் சொல்லா மல் தப்பித்துக் கொண்டார். அல்லது எல்லாருக்கும் தெரிந்ததையே விகசித சாதுரியத்துடனே சொல்லிச் சமா ளித்துக் கொண்டார். ஆனாலும் தன் னுடைய அதிர்ஷ்ட கிரகங்கள் உச்சத் துக்கு வந்திருப்பதாக நல்ல வார்த்தை சொன்னார் அல்லவா? குடந்தை ஜோதி டர் நன்றாயிருக்கட்டும்!......



வ்வாறெல்லாம் சிந் தித்துக் கொண்டு வந் தியத்தேவன் சென் றான். அவ்வப்போது எதிர்ப்பட்ட காட்சி கள் இடையிடையே அவனைச் சிந்தனை உலகத்திலிருந்து இவ்வுலகத்துக்கு இழுத்தன.

கடைசியில் அரிசிலாற்றங் கரையை அடைந்தான். சிறிது தூரம் ஆற்றங் கரையோடு சென்றதும், பெண்களின் கைவளை குலுங்கும் சத்தமும் கலகல வென்று சிரிக்கும் ஒலியும் கேட்டன. அவர்கள் இருக்குமிடம் தெரியாமல் அரிசிலாற்றங் கரையில் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்கள் மறைத்துக் கொண்டிருந்தன. எங்கிருந்து அப் பெண்களின் குரல் ஒலி வருகிறது என்று கண்டுபிடிக்க வந்தியத்தேவன் ஆற்றங்கரை ஓரத்தை உற்றுப் பார்த் துக்கொண்டேசென்றான். திடீரென்று "ஐயோ!" "ஐயோ!" "முதலை!" "முதலை!" "ஐயோ! பயமாயிருக் கிறதே!" என்ற பெண்ணின் அபயக் குரலையும் கேட்டான். குரல் வந்த திசையை நோக்கிக் குதிரையைத் தட்டி விட்டான். அந்தப் பெண்கள் இருந்த இடம் இரு மரங்களின் இடைவெளி வழியாக அவனுக்குத் தெரிந்தது. அவர்களில் பலருடைய முகங்களில் பீதி குடிகொண்டிருந்தது. அதிசயம்! அதிசயம்! அவர்களிலே இருவர் ஜோதிடர் வீட்டிற்குள்ளே வந்தியத் தேவன் பிரவேசித்ததும் புறப்பட்டுச் சென்றவர்கள்தான். இதையெல்லாம் நொடி நேரத்தில் வந்தியத்தேவன் பார்த்துத் தெரிந்து கொண்டான். அதை மட்டுமா பார்த்தான்? ஓர் அடர்ந்த நிழல் தரும் பெரிய மரத்தின் அடியில், வேரோடு வேராக, பாதி தரையிலும் பாதி தண்ணீரிலுமாக, ஒரு பயங்கரமான முதலை வாயைப் பிளந்து கொண்டிருந்தது. சமீபத்திலேதான் கொள்ளிட நதியில் ஒரு கொடூரமான முதலை வாயைப் பிளந்து கொண்டு வந்ததை வந்தியத்தேவன் பார்த்திருந் தான். முதலை எவ்வளவு பயங்கரமான பிராணி என்பதையும் கேட்டிருந்தான். ஆகவே இந்த முதலையைப் பார்த்ததும் அவன் உள்ளம் கலங்கி உடல் பதறிப் போனான். ஏனெனில், அந்த முதலை சற்று முன் கலகலவென்று சிரித்துக் கொண்டிருந்த பெண்களுக்குச் சமீ பத்தில் இருந்தது. வாயைப் பிளந்து கொண்டு, கோரமான பற்களைக் காட்டிக் கொண்டு, பயங்கர வடிவத் துடன் இருந்தது. முதலை இன்னும் ஒரு பாய்ச்சல் பாய வேண்டியதுதான். அந்தப் பெண்களின் கதி அதோ கதி யாகிவிடும்! அந்தப் பெண்களோ, பின்னால் அடர்த்தியாயிருந்த மரங் களினால் தப்பி ஓடுவதற்கும் முடியாத நிலையில் இருந்தார்கள்.



ந்தியத்தேவனுடைய உள்ளம் எவ்வளவு குழம்பியிருந் தாலும் அவன் உறுதி அணுவளவும் குன்ற வில்லை. தான் செய்ய வேண்டியது என்னவென்பதைப் பற்றியும் அவன் ஒருகணத்துக்கு மேல் சிந்திக்கவில்லை. கையிலிருந்த வேலைக் குறி பார்த்து ஒரே வீச்சாக வீசி எறிந் தான். வேல் முதலையின் கெட்டியான முது

விடாமுயற்சி அல்லது பயிற்சி தான் "அப்யாஸம்" என்று பகவான் சொன்னது. தேஹாப்யாஸம் என்கிறோம். எத்தனை நாள், ஒவ்வொரு நாளும் எத்தனை தரம் தண்டால், பஸ்கி போட வேண்டி யிருக்கிறது? அந்தந்த யோகாஸனத்துக்கு உரியபடி கையை காலை நீட்டி மடக்குவதற்கு எத்தனை நாள் முயற்சியும், பயிற்சியும் பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டி யிருக்கிறது? அப்படிப் பண்ணிக் கொண்டே போனால் கடைசியில் ஒரு நாள் ஸரியாக வந்துவிடுகிறதோல்லியோ? அப்படித்தான் அஸுரப்போக்கிலே ஓடும் மனஸை விடாமுயற்சியாலும் விடாத பயிற்சியாலும் திரும்பத் திரும்ப இழுத்து தேவ சக்திகளான நல்ல விஷயங்களில் செலுத்த வேண்டும்.

இப்படி ஜட நிலைக்கு மேற்பட்ட ஆறறிவை முதலில் அதன் மிருகத்தன்மை யிலிருந்து மனுஷத் தன்மைக்கும் அப்புறம் தேவத் தன்மைக்கும் உசத்திக் கொண்டே போய், அப்புறம் இவற்றுக்கும் உயர்வான ஏக அறிவான ஆத்மாவிலே கரைத்துவிட வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

## அருள்வாக்கு



கில் பாய்ந்து சிறிது உள்ளேயும் சென்று செங்குத்தாக நின்றது. உடனே நமது வீரன் உடைவாளை உருவிக் கொண்டு முதலையை ஒரேயடியாக வேலை தீர்த்து விடுவது என்ற உறுதியுடன் பாய்ந்து ஓடி வந்தான்.

முன்போலவே, அந்தச் சமயத்தில் அப்பெண்கள் கலகலவென்று சிரிக்கும் சத்தம் கேட்டது. வந்தியத்தேவன் காதுக்கு அது நாராசமாயிருந்தது. இத்தகைய அபாயகரமான வேளையில் எதற்காக அவர்கள் சிரிக்கிறார்கள்? பாய்ந்து ஓடிவந்தவன் ஒருகணம் திகைத்து நின்றான். அப்பெண்களின் முகங்களைப் பார்த்தான். பயமோ, பீதியோ, அம்முகங்களில் அவன் காணவில்லை. அதற்கு மாறாகப் பரிகாசச் சிரிப்பின் அறிகுறிகளையே கண்டான். சற்று முன் "ஐயோ! ஐயோ!" என்று கத்தியவர்கள் அவர்கள்தான் என்றே நம்ப முடியவில்லை. அவர்களில் ஒருத்தி, — ஜோதிடர் வீட்டில் தான் பார்த்த பெண், — கம்பீரமான இனிய குரலில், "பெண்களே, சும்மா இருங்கள்! எதற்காகச் சிரிக்கிறீர்கள்?" என்று அதட்டும் குரலில் கூறியது கனவில் கேட்பது போல அவன் காதில் விழுந்தது.

முதலையண்டை பாய்ந்து சென்றவன் வாளை ஓங்கிய வண்ணம் தயங்கி நின்றான். முதலையை உற்றுப் பார்த்தான். அந்தப் பெண்களின் முகங்களையும் இன்னொரு தடவை உற்றுப் பார்த்தான். அவன் உள்ளத்தை வெட்கி மருகச் செய்த, — உடலைக் குன்றச் செய்த, — ஒரு சந்தேகம் உதித்தது.

இதற்குள்ளாக, அந்தப் பெண் மணி, — அவனுடைய சிந்தையில் சிறிது நேரமாகக் குடிகொண்டிருந்த மங்கை — மற்றவர்களைப் பிரிந்து முன்னால் வந்தாள். முதலைக்கு எதிர்ப்புறத்தில், அதைக் காப்பாற்றுகிறவளைப் போல் நின்றாள்.

"ஐயா! தங்களுக்கு மிக்க வந்தனம். தாங்கள் வீணில் சிரமப்பட வேண்டாம்!" என்றாள்.

(தொடரும்)

ஒரு ரவுண்ட்-அப்



* கல்லிடைக்குறிச்சி: நெஞ்சை அள்ளும் தாமிர பரணி

* கூனியூர்: திறக்கப்படாத குடிநீர்த் தொட்டி

# சபாநாயகர் தொகுதி எப்படி இருக்கிறது?

**தமிழக சட்டசபையின் சபாநாயகர் பி.ஹெச். பாண்டியனின் சட்டசபைப் பேச்சுக்கள் அங்கு நடந்து கொள்கிற போக்கு இவை அவருடைய ஒருமுகம்தான். அவருடைய தொகுதி எப்படியிருக்கிறது? அவரைத் தேர்ந்தெடுத்த மக்கள் அவரைப் பற்றி என்ன சொல்கிறார்கள்? அந்த இரண்டாவது முகத்தைக் காண்போம். . . . . . .**

சட்டசபையில் மிகவும் சர்ச்சைக்குரியவராக நடந்து கொள்ளும் சபாநாயகர், தொகுதியில் எப்படி நடந்து கொள்கிறார்? உதாரணத்திற்கு ஒரு சின்னச் சம்பவம். பத்திரிகைகளில் மிகவும் பரபரப்பாகச் சபாநாயகர் பெயர் அடிபட்டுக் கொண்டிருக்கும்போது, அவருடைய தொகுதியில் உள்ள ஒரு சிறு கிராமத்தில் புகைச்சல்; ஜாதித் தகராறு. இன்னும் சற்று புகைந்தால் ஜாதிக் கலவரமாகலாம் என்கிற நிலை. சபாநாயகருக்குப் போன் போகிறது. அவசரமாய் ஓடி வருகிறார். இரண்டு சமூகத்தினரையும் கூட்டிச் சமாதானப்படுத்துகிறார். "நான் என்னடான்னு... அங்கே யானையோடு மல்லுக் கட்டிகிட்டிருக்கேன். நீங்க என்னடான்னு ஒரு கொசுவை அடிக்கக் கூப்பிடுகிறீங்களே நியாயமாப்பா....?" என்றபடி சமாதானம் செய்துவிட்டுச் சென்னைக்குப் பறக்கிறார். — இது தொகுதிக்கான முகம்.

தொகுதி முழுக்கப் பல ஊர்களில் பல்வேறு தரப்பினரைச் சந்தித்தோம். "சார்... சபாநாயகரோட சட்டசபை நடவடிக்கைகளைப் பத்தி நாங்க பேச விரும்பலை... எங்களுக்கு அது தேவையுமில்லை. எங்க தொகுதிக்கு அவர் எம்.எல்.ஏ. எங்கள் எம்.எல்.ஏ.வா எவ்வளவு காரியங்களை இது வரை சிறப்பாச் செய்திருக்கார்னுதான் நாங்கள் பார்க்கிறோம். இந்தத் தொகுதியைப் பொறுத்தவரை, அவர் கட்சிக்கு அப்பாற்பட்ட ஆள். எம்.ஜி. ஆர். தயவில்லாமலேயே அவராலே இந்தத் தொகுதியில் ஜெயிக்க முடியும். என்ன அப்படிச் சொல்றீங்கன்னு சாருங்கறீங்களா? இந்தாப் பாருங்க... இந்தப் பாலத்தை...! எவ்வளவு பெரிய பாலம். அறுபத்தாறு லட்சம் செலவிலே வேலை நடக்குது தெரியுங்களா? இதால இப்போ நாங்க திருநெல்வேலிக்குச் சுளுவாப் போயிடலாம்...." என்று சொன்



* மேலச்செவல்: 37 லட்சம் செலவில் ஒரு குடிநீர்த் தொட்டி

* அறுபத்தாறு லட்சம் செலவில் பாலம்...





* பத்தமடை: காத்திருக்கும் படுக்கைகள்

ளர் காலையில் ஆற்றில் குளித்துத் திரும்பிக் கொண்டிருந்த கோபாலசமுத்திரத்திலுள்ள தனியார் பள்ளியின் தலைமையாசிரியரான நீலகண்டன்.

பாலத்தைப் பார்த்தோம். கிராமப்புறத்திற்கே கொஞ்சம் வித்தியாசமான பெரிய பாலம். ஏறத்தாழ முடிவடைந்த நிலை. ஜனங்களிடத்தில் பாலம் பற்றிப் பேசும்போது ஒருவித உற்சாகம்.

இதையடுத்த மேலச்செவலில் 37 லட்சம் செலவில் தண்ணீர்த் தொட்டி 'சாங்ஷன்' ஆகி அதுவும் கட்டி முடியும் நிலையில் இருக்கிறது. இங்கேயே உள்ள ஆதித்தவரேஸ்வரர் கோயிலில் பல வருடங்களாகச் சிதைவடைந்த நிலையிலிருந்த தேருக்காக ஒரு திருப்பணிக் கமிட்டி அமைக்கப்பட்டு, இதற்கான வேலைகளும் நடந்து கொண்டிருக்கின்றன. பாண்டியன் முயற்சியில் இப்படி நடப்பது, ஊரிலுள்ள இந்துக்களுக்கு அவர் மேல் ஒருவித மதிப்பை ஏற்படுத்தியிருக்கிறது. சின்னச் சின்ன ஊர்களுக்குக்கூட மினி பஸ்கள் வந்து போகின்றன. சேரன் மதா தேவியிலிருந்து தேசமாணிக்கம் என்னும் கிராமத்திற்குச் செல்லும் ஒரு மினி பஸ்ஸை நிறுத்தி டிரைவர் பரமேஸ்வரனை விசாரித்தோம். "ரொம்பக் குறுகலான பாதை இது. ஆனாலும் சபாநாயகர் முயற்சியிலேதான் பஸ்கள் விட்டிருக்காங்க. பஸ்கள் விட்டு மூணு வருஷமாகுது. இது மாதிரி இரண்டு பஸ்கள் ஓடுதுங்க..." என்றார் அவர்.

"கலெக்ஷனெல்லாம் எப்படி?" என்றதும், "ஒருநாள் கலெக்ஷன் முந்நூறு ரூபா தான் இருக்கும். இருந்தாலும் கிராம ஏரியாக்களுக்குப் பஸ் வசதி வேணுங்கிறதனாலே இப்படி விட்டிருக்காங்க" என்றார் கண்டக்டரான மீரா முகைதீன்.

பாய்க்குப்பெயர்பெற்றபத்தமடையிலும், குடிநீர் உபயோகத்திற்காகப் பிரம்மாண்டமானதொரு தண்ணீர்த் தொட்டி எழும்பிக் கொண்டிருக்கிறது; இது தவிர அந்தச் சிறு ஊரில் புதுப்புது 'லேட்' வசதிகளுடன் பணிச் சென்றிருக்கிற அரசாங்க ஆஸ்பத்திரி. (படுக்கைகளுக்கு டிமாண்ட் இல்லாமல் நோயாளிகளை எதிர்பார்த்துப் புதிதான பெட்கள் இருப்பதை இந்த ஊரில் மட்டும் பார்க்க முடிந்தது) எக்ஸ்ரே வசதி, புதிதாக ஒரு கட்டடம் எல்லாம் சேர்த்து எட்டு லட்சம் செலவு என்றார்கள்.

**கூ**னியூர் என்ற ஊருக்குச் சென்ற போது, அங்கு கடந்த 16.6.84 அன்று சபா நாயகரால் கூனியூர் கிராம குடிநீர்த்திட்டத்திற்கு அடிக்கல் நாட்டப்பட்டுக் கட்டி முடிக்கப்பட்ட குடிநீர்த் தொட்டி இன்னமும் செயல்படாமல் இருப்பதைப் பார்த்தோம். விசாரித்த போது, "எப்படியும் சபாநாயகர் முயற்சி எடுத்துச் சீக்கிரம் திறந்திடுவாங்க..." என்றார்களே தவிர, அவர் மேல் ஒரு குற்றச்சாட்டாகச் சொல்லவில்லை அவ்வூர் மக்கள். அதேபோல் ஓடைமறிச்சான் என்ற ஊரில் சரிவரக் கவனிக்கப்படாமலிருக்கும் தாய் சேய் நல விடுதி பற்றி விசாரித்த போதும், அது அதிகாரிகளின் குறைகளே தவிர, பாண்டியனின் குறை அல்ல என்றார்கள்.

ஓ.துலுக்கப்பட்டியில், ஏறத்தாழ எண்பத்து நான்கு வயதானவரான இ.காங்கிரஸ் பஞ்சாயத்துத் தலைவர் பொன்னையா நாடாரைச் சந்தித்துத் தொகுதி பற்றிக் கேட்டோம். "ரோடெல்லாம் அங்கங்கே சரியில்

லாமத்தான் இருக்கு. இருந்தாலும் பாண்டியன் நல்ல காரியங்கள் எவ்வளவோ பண்ணியிருக்கார். ஆனா எல்லாத்தையும் அவராலா தொடர்ந்து கவனிச்சுக்கிட்டிருக்க முடியும்? இப்பப் பாருங்க. சாராயக் கடையை மூடிட்டாங்க. ஆனாலும் இங்கே 'ஒபனா' சாராயம் வித்துக்கிட்டுத்தானே இருக்கான்... இங்கே இருக்கிற ஸ்கூல்லே கூட ஆசிரியர் போதாம இருக்கு. அவர்கிட்டே சொல்



" சண்முகானந்தம் | " நீலகண்டன்

லணும்'' என்றார்.

''ஏழைக் கைத்தறி நெசவாளர்கள் இந்தப் பக்கம் ஜாஸ்தி. அவங்களுக்கெல்லாம் தனியா விசைத்தறிக் கூடம் வைச்சுக் கொடுத்திருக்காரு பாண்டியன். இதெல்லாம் மற்ற யாரு செஞ்சா, சொல்லுங்க?'' என்று திருப்பிக் கேள்வி கேட்டவர் வீரவநல்லூரைச் சேர்ந்த நாராம்புலிங்கம் அடவியார்.

எம். எல். ஏக்கள் விலக்கப்பட்டதை ஒட்டி, தி. மு. க.காரர்கள் சபாநாயகர் மேல் கடுமையான பார்வை பார்த்துக் கொண்டிருக்கையில் — தி. மு. க. விலிருந்து முக்கியஸ்தர் ஒருவர் சபாநாயகரைப் பாராட்டுவதென்றால் எப்படி? கல்லிடைக்குறிச்சி பேரூராட்சித் தலைவரான தி. மு. க. வைச் சேர்ந்த கே. எஸ். சுப்ரமணியன்தான் இப்படிப் பேசினார்.



" தர்மலிங்கம் | " பொன்னையா நாடார்

''சபாநாயகர் செய்த பதவி நீக்கத்தை எதிர்த்தோம். அதையெல்லாம் நாங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் இந்த ஊரிலுள்ள எவ்வளவோ பிரச்னைகளை — ஸ்கூல் பிரச்னைகளை — மற்ற கிராமப் பிரச்னைகளை ஓரளவு அக்கறையோடு தீர்த்து வைத்திருக்கிறார் அவர். அதற்காகத்தான் பி.ஹெச். பாண்டியனைப் பாராட்டுகிறோம்; ஆதரிக்கிறோம். அது அவர் அரசியலை வைத்து இல்லை; அவர் செய்கிற வேலைகளை வைத்துத்தான் ஆதரிக்கிறோம். எவ்வளவோ பிரச்னைகளைத் தீர்த்து வைக்கிறார். அந்த விதத்திலே அண்ணா சொன்ன மாதிரி, அவர் மாற்றான் தோட்டத்தில் இருந்தாலும் மல்லிகை!'' என்று மனதாரப் பாராட்டினார் சுப்ரமணியன்.

''சபாநாயகரை, இந்தத் தொகுதியில் அவர் செய்கின்ற வேலைகளை வைத்துத்தாங்க பார்க்கிறோம். திருவிடைமருதூர், வெள்ளால் ஓடைப் பகுதிகளில் பாலங்களுக்காக மட்டுமே ஒரு கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டிருக்கிறது. தன்னிறைவுத் திட்டத்திற்கு என்று ஒரு கோடி ரூபாய் செலவு பண்ணப்பட்டிருக்கிறது. முப்பத்து மூன்று கிராமங்களுக்கான குடிநீர்த்திட்டத்திற்கு ஒன்றரைக் கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டிருக்கிறது; இன்னும் நெல்லையிலிருந்து கோபால சமுத்திரம் வருகிற வழியில் பாலமே இல்லாமல் ரோட்டிலேயே ஆறு 'கிராஸ்' பண்ணுகிறது. தருவை தாம்போதிங்கிற அந்த இடத்திலே ஒரு பாலம்கட்டணும்...'' என்றார் தமிழாசிரியரான சண்முகானந்தர்.



" கண்டக்டர் மீரா மொய்தீன் | " டிரைவர் பரமேஸ்வரன்

''சபாநாயகர் சென்னையில் இருந்தாலும் தொகுதியில் அவரை அடிக்கடி பார்க்கலாம். யாரும் சுலபமாக அவரைப் பார்க்கலாம்; குறைகளைச் சொல்லலாம். அதனால் தான் மூன்று முறை இதே தொகுதியிலே நின்று ஜெயித்திருக்கிறார். முதலில் இரண்டாயிரம் ஓட்டு வித்தியாசம்; பிறகு பன்னிரண்டாயிரம்; பிறகு முப்பதாயிரம் ஓட்டு வித்தியாசத்தில் ஜெயித்ததே இந்தத் தொகுதி மக்கள் இவர் மேலே வைத்திருக்கிற நம்பிக்கையினாலேதான். மொத்தத்திலே பத்துக் கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டு, அநேகமாக அடிப்படைத் தேவைகள் எல்லாம் பூர்த்தி செய்யப்பட்ட தொகுதி இதுவாகத்தானிருக்கும்'' என்றார் தர்மலிங்கம்.

சட்டசபையில் பி. ஹெச். பாண்டியன் காட்டுகிற முகத்தை விட சொந்தத் தொகுதியில் தெரிகிற முகம் பிரகாசமாகவே இருக்கிறது. தமிழகத்திலுள்ள வேறோர் எம். எல். ஏ. இந்த அளவுக்குத் தமது தொகுதி மக்களுக்குச் செய்திருப்பாரா என்பது சந்தேகமே.

— சூகி

# 17 மோகம் என்பது இதுதானோ?

உஷாசுப்பிரமணியன்

"அப்பா, நான் இந்த வருஷம் பள்ளிக்கூடத்துக்குப் போக முடியாதது பற்றிக் கவலைப்படப் போறதில்லை. எப்படியும் ஒன்பதாவது வகுப்பு போர்ஷன்ஸ் முடிந்தாகிவிட்டது. தினம் சாயந்திரம் உங்ககிட்டப் பாடம் கத்துக்கறேன்பா. நீங்க பள்ளியிலிருந்து வந்த பிறகு இரண்டு மணி நேரம் பாடம், ஒரு மணி பாட்டுச் சாதகம்."

துடிப்பை இழந்தவளாக, சோம்பிச் சோர்ந்து கிடந்த மகளிடம் திடீரென்று தோன்றியிருந்த ஆர்வம் சுந்தரத்திற்கு வியப்பை அளித்தாலும், அதோடு ஒரு மகிழ்ச்சியும் சுரந்தது. "என்ன புவனா, திடீர்னு ஞானோதயம் வந்திடுச்சு?"

"இல்லைப்பா, நானும் யோசித்துப் பார்த்தேன். படிப்பு பாதியிலே நின்னுடுச்சேன்னு அழறதைவிட, அதை எப்படித் தொடரலாம்னு யோசிக்கத் தோணிச்சு.... பாட்டும் முறையாக் கத்துக்கிட்டதில்லை. இனிமேலாவது இதெல்லாம் செய்யலாமில்ல."

"உங்கம்மா ஒன்னை மறுபடியும்பட்டணம், கூட்டம்னு இழுக்காம இருந்தா எல்லாமே நல்லபடியா நடக்கும் புவனா..." சுந்தரம் மகளைக் கனிவுடன் பார்த்தார்.

புவனாவின் உள்ளம் குறுகுறுத்தது. அவளிடம் இவ்வளவு நம்பிக்கையும், அன்பும் வைத்திருப்பவரிடம் சேகர் கடிதம் எழுதியதைச் சொல்லாமல் மறைப்பது சரிதானா? சேகருடன் அவன் பெற்றோர் வீட்டுக்கு விடுமுறையில் அனுப்பத் தயாராக இருந்த அப்பா கடிதம் எழுதுவதைத் தவறான விஷயம் என்று எண்ணுவாரா? தவறோ, சரியோ, சேகர் அவளுக்கு ரகசியமாகவே கடிதம் எழுதியிருக்கிறான். அதனால் அவளும் இந்த விஷயத்தை ரகசியமாகவே வைத்துக் கொள்ள வேண்டும்."

முதல் கடிதத்திற்குப் பதில் எழுதும்போது பயமாக இருந்தது. சேகர் தன் எழுத்தையும், நடையையும் பரிகசிப்பானோ என்று பயமாக இருந்தது. அந்த பயத்தையே அவள் கடிதத்திலும் வடித்தாள்.

'புவனா என்ற இரண்டு வயதுக் குழந்தையை நான் தோளில் முதன்முதலில் தூக்கிய போது ஏற்பட்ட உணர்வு இன்று எனக்கு உன் கடிதத்தைப் படித்தபோது வந்தது. உன்னை முதலில் தூக்கியபோது பயந்தது நீ மட்டுமல்ல புவனா, எங்கே உன்னைக் கீழே நழுவ விட்டுவிடுவேனோ என நானும் பயந்தேன். ஒருமுறை தூக்கிய பிறகு அந்தப் பயம் இருவருக்குமே விட்டுவிட்டது. என்னைப் பார்த்ததுமே நீ இரண்டு கைகளையும் தூக்கிக் கொண்டு ஓடி வருவாய். நானும் ஆவலுடன் உன்னைத் தூக்குவேன். உன் குழந்தைத்தனமான கடிதத்தைப் படிக்கும்போது, நானே குழந்தையாக மாறிப் போகிறேனா, அல்லது உனக்கு அரவணைப்பு தரப் போகிற பெரிய மனுஷனாக மாறிப் போகிறேனா என்று புரியவில்லை.'

சேகர் தன் கடிதங்களில் தன் படிப்பைப் பற்றி எழுதினான். அமெரிக்காவைப் புகைப்படமாக்கி அனுப்பினான். மாதம் இரண்டு கடிதங்கள் தவறாமல் வந்தன. புவனாவும், யாரும் அறியாத வண்ணம் பதிலெழுதினாள். குறுகுறுப்பு, கண்டுபிடிக்கப்பட்டு விடுவேனோ என்ற பயத்தையும் மீறிய ஆவல், வேகம்.

லோகுவிடமாவது சொல்லிவிடலாம் என்று பலமுறை அவள் நினைத்ததுண்டு. ஆனால் சதா அத்தானை நினைத்து உருகி, மாய்ந்து போகும் லோகுவிடம், "உன் அத்தான் உன்னை நினைப்பதுகூட இல்லை போலிருக்கே. சேகரானால் எனக்கு எப்படியெல்லாம் எழுதுகிறான் பார்' என்று பீற்றிக் கொள்வதுபோல் இருக்காதோ.... வேண்டாம் வேண்டாம்... இப்போது யாரிடமும் சொல்ல வேண்டாம்.

சேகர் எழுதும் கடிதங்களை ஒளித்து வைப்பதுதான் மிகப் பெரிய பிரச்னையாக இருந்தது. அனைவருக்கும் தனித்தனியே துணிகள் வைத்துக் கொள்ள ட்ரங்குப் பெட்டிகள் இருந்தாலும், அத்தனை சாவிகளும் நடு ஹாலில் ஆணியில்தான் தொங்கின. லோகு விரும்பியபோது புவனாவின் பாவாடை, தாவணிகளை எடுத்தணியத் தயங்கியதே இல்லை. திடீரெனத் தன் சாவியை மட்டும் ஒளித்து வைப்பது எப்படி?

சேகர் வீட்டுத் தோட்டக்காரனிடமே கடிதங்களைக் கொடுத்து வைக்கலாமென்றால் அவன் பேரன் எங்காவது எடுத்துப் படித்து ஊர் முழுவதும் தமுக்கடித்துவிட்டால் என்ன செய்வது? அதோடுகூட, தோட்டக்காரத் தாத்தாவிடமிருந்து தினம், தினம் கடிதங்களைப் படித்துவிட்டுத் தருகிறேன் என்று கேட்டு வாங்க முடியுமா... ஒரு நாளைக்கு

ஒரு முறையா... எத்தனை முறை அவள் அதே கடிதங்களைத் திரும்பத் திரும்பப் படிக்கிறாள். ஒவ்வொரு முறை படிக்கும்போதும் அவள் மயிர்க் கால்கள் சிலிர்த்து நிற்கின்றன. அவள் உடம்பின் ஒவ்வொரு அணுவிலும் மெல்லிய ஊற்றில் நனைவது போன்ற சுகம் தோன்றுகிறது. அவள் மனம் துரித கதியில் தாளம் போடுகிறது. இதுதான் காதலோ என்று நினைத்தபோது, புவனாவுக்குப் பய மாக வேறு இருந்தது. அதேசமயம், பதினாறு வயதில் யாரும் காதல் செய்யமாட்டார்கள் எனத் தானே சமாதானமும் செய்து கொண் டாள்.

ஓட்டு வீட்டின் எரவாணத்தில் சின்னத் தகரப் பெட்டியில் சேகர் எழுதும் கடிதங் களும், அவள் பதிலெழுத வாங்கி வைத் திருந்த ஸ்டாம்பு, கவர்களும் ரகசியமாக இடம் பெற்றன.

இப்போதெல்லாம் அவள் பள்ளி நேரத்தி லேயே அடிக்கடி பள்ளிக்குச் செல்கிறாள். ஆசிரியர்களிடம் பாட விளக்கங்கள் கேட் கிறாள். நாலு மாதம் கழித்து வரப் போகும் பரீட்சைக்கு இப்போதே தயார் செய்யத் துவங்கிவிட்டாள். ஒன்பதாம் வகுப்பில் எப்படியாவது முதலில் வர வேண்டும். அப் போதுதான் பத்தாவதில் நிறைய மார்க் எடுத்து, சேகர் போல் பள்ளியில் முதலாவ தாக வரமுடியும். நன்றாகப் படித்தால், சேகருடன் அமெரிக்கா சென்று படிப்பைத் தொடரலாம்.



கற்பனைகள்... கற்பனைகள்... எத்தனை விதமான எதிர்பார்ப்புகள்... படிப்பில் முன்னுக்கு வர ஆசை. பாடிப் பேரெடுக்க ஆவல். எல்லாவற்றுக்கும்மேல் சேகர் போற்றும் விதத்தில் தன் வாழ்வை அமைத்துக்கொள்ள ஆசை. அவள் தன் விருப்பங்களை வெளியிடும்போது சுந்தரம் புன்சிரிப்புடன் பதிலளிப்பார். "நிறைய ஆசை வச்சுக்கோ புவனு. அதிலே தப்பில்லே... ஆசைகள் இல்லாம மனுஷன் தன்மானமுள்ள வாழ்க்கை வாழவே முடியாது. ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு விதமான விருப்பம். உனக்கு இருக்கிறது நேர்மையான விருப்பம் தானே... கல்வி, இசை இரண்டுமே மனுஷனை உயர்த்துகிற விஷயங்கள். ஆசை வைத்தால் மட்டும் போறாதும்மா. அதை அடைய உழைக்கணும். ஒருமுனைப்பட்டு உழைக்கணும்...

"நான் சோம்பேறியில்லப்பா.... இப்போவே உங்ககிட்ட எவ்வளவு ராகம் கத்துக்கிட்டேன் பாருங்க. படிப்பிலேயும் மோசமில்லையே... நீங்கதான் 'குட்' போட்டீங்களே. நான் நல்லாத்தானே உழைக்கிறேன்."

"ஆமாம்" சுந்தரம் மகளைத் தட்டிக்கொடுத்தார்.

புவனு திடீரெனச் சிந்தனை வயப்பட்டாள். "ஏம்ப்பா உங்க வாழ்க்கையிலே என்ன ஆசை, குறிக்கோள் வச்சிருக்கீங்க?"

"என் வாழ்க்கையிலே ஆரம்ப காலத்திலேயே நான் நல்ல மனுஷனாக வாழணுங்கறதைத்தான் குறிக்கோளாகக்கொண்டேன். நான் வளர்ந்த காலம் அப்படி. அப்போவெல்லாம் தர்மத்துக்குப் பணத்தைவிட மதிப்பிருந்தது. தெய்வ குணம் கொண்ட மனிதர்கள் என்று அடையாளம் காட்டவாவது நாலு பேர் இருந்தாங்க. பணத்துக்கு நேர்மை தலை வணங்காது. காந்தித் தாத்தா போன்றவங்க கேலிப் பொருளாக மாறவில்லே. அரசியல்வாதிகளிடம் சிந்தனைக் குழப்பம் இருந்திருக்கலாம். ஆனால் நேர்மை பற்றிய குழப்பம் இல்லே. இவ்வளவு கஷ்டப்பட்டுப் பெற்ற சுதந்திரத்தைக் காக்க வேண்டுமே என்ற பதைப்பு இருந்தது. மனைவி, குழந்தைகள், அக்கா, அத்தானை விட, அவர்களுக்கு நாடு முக்கியமாக இருந்தது. அதனால் அவங்களால பொதுமக்களிடம் ஒற்றுமையையும், ஒழுங்கையும் பற்றிப் பேச முடிந்தது. அவர்கள் நிழலிலே, அவர்கள் தலைமையை ஏற்று வளர்ந்த என்னைப் போன்றவங்க இன்னும் எங்க பழைய கணிப்புகளை மாற்றிக்க விரும்பவில்லே. எங்கப்பா சொல்லித் தந்த தேவாரம், திருவாசகம், திருமறை, எங்க கல்வி தந்த ஒழுக்கக் கட்டுப்பாடு, எங்க தலைவர்கள் எங்களுக்கு உணர்த்திய மனிதாபிமானம் இதெல்லாம் சேர்ந்து, என்னை ஒரு நிதானமான, பேராசையற்ற, பொய் சொல்லாத, புரட்டுச் செய்யாத, தர்ம நியாயத்துக்குப் பயந்த நல்ல மனிதனாக வாழ் என்றுதான் வழிகாட்டியது."

புவனு பிரமிப்புடன் தந்தையைப் பார்த்தாள். அப்பா பேசியதில் பாதிதான் புரிந்தது. "நல்லவராக இருக்கிறது மட்டும்தானு உங்க ஆசை. அப்போ நீங்க ஏன் காலேஜ்ல படிச்சீங்க. வேலைக்கு வந்தீங்க... சும்மா வீட்டிலிருந்தபடியே நல்லவரா இருந்திருக்கலாமே?"

"நீ புத்திசாலிப் பெண் புவனு. அதனாலதான் இப்படி ஒரு கேள்வி கேட்கிறாய். நீ சொல்றபடி சும்மாக் கிடப்பது மனுஷ வாழ்வின் சிறப்பில்லே. உழைக்கத்தானே நமக்குக் கடவுள், கை, கால் படைத்திருக்கிறார். கல்வி அறிவு பெறவும் சிந்திக்கவும்தான் மூளையைத் தந்திருக்கிறார். சந்ததி பெருக எனச் சில விதிமுறைகளை வகுத்திருக்கார். இந்த எல்லாக் கடமையையும் நேர்மை பிறழாமச் செய்தபடி, அதற்கு மேலும் சுயநலமில்லாமல், திருப்தியுடன் பகிர்ந்து வாழ்வதுதான் நல்ல மனிதனுக்கு அடையாளம்."

"நீங்க பெரிய ஆபீஸராகணும், பட்டணத்திலே பெரிய வீடு கட்டணும்னு நினைச்சதில்லே?"

"பட்டணத்திலே பெரிய வீடு கட்டியவன் என்னைவிடச் சந்தோஷமாக இருப்பான்னு நான் நினைச்சதில்லே. அவனுக்கு இவ்வளவு புத்திசாலியான மகள் இல்லாமல் போகலாம் இல்லேயா?"

"போங்கப்பா...." புவனு முகம் சிவந்தாள். அப்பாவை அவளால் முழுவதுமாகப் புரிந்துகொள்ள முடியவில்லை என்றாலும் அவரிடம் ஏதோ ஒருவிதமான கம்பீரமும், ஆகர்ஷண சக்தியும் இருந்தன. அவளுக்குத் தெரியும். சேகர், அவன் தந்தை போன்ற பலரும் ஏன் அப்பாவை இவ்வளவு மதிக்கிறார்கள். அவரிடம் ஏதோ விஷயமிருக்கிறது.

"ஏய் புவனு... சும்மா அப்பாவும் பெண்ணும் வீண் வம்படிச்சுக்கிட்டு நிக்காதீங்க. இந்தப்புறம் வா. மெட்ராஸ்ல பாடின பாட்டுப் புத்தகமெல்லாம் வச்சிருக்கியா இல்லே, தாரை வாத்துட்டியா... இன்னிக்கு வழியிலே அண்ணனைப் பார்த்தேன். உன்னை விசாரிச்சாரு."

"ஆரும்மா அண்ணன்....?"

"அதான் செல்வி புருஷன்... போன வாரம் பட்டணம் போயிருந்தாராம். அப்போ மந்திரிகிட்ட உன்னைப் பத்தி ஞாபகப்படுத்தினாராம். பத்தாவது முடிக்கட்டும். இங்கே ஸ்காலர்ஷிப் ஏற்பாடு செய்து தரேன். பாட்டுக் கத்துக்கட்டும்ன்னார். தினம் ஆயிரம் ஜனங்களைப் பார்க்கிறவர் எவ்வளவு பெரிய தலைவரு அந்த ம.ரா. உன் முகத்தை ஞாபகம் வச்சிருக்காருன்னு பாரேன்..."

"கரடி என்னை ஞாபகம் வச்சிருக்காரா..." புவனு குபீர் எனச் சிரித்தாள்.

"உஷ்... அந்த மாதிரியெல்லாம் சிரிக்காதே. மரியாதை கத்துக்க. அடுத்த மாசம் அவரும், முதலமைச்சரும் நம்ம பக்கங்கள்ள 'டூர்' வர்றாங்களாம். அவங்ககூடப் போக வேண்டியிருக்கும்னு அண்ணன் சொன்னார். இதை இப்போதைக்கு உன் மனசிலேயே வைச்சுக்க. உங்க அப்பா

●● தம்முடைய ஆசைகள் சாம்பலாக வேண்டும். விழிப்பு என்பது அதன் உருவகமே. துறவு மனப்பான்மையையும் பற்றற்ற நிலைமையும் உணர்த்தும்.

இட்டப் போயி வத்தி வெச்சே, காரியம் கெட்டுப்போயிடும்சொல்லிட்டேன். போன தரம் தந்த பணத்துக்கே உனக்குத்தான் அரைப் பவுனுக்குக் கம்மலும், வெள்ளிக் கொலுசும் வாங்கி வச்சிருக்கேன். நீ சம்பாதிக்கிற பணத்திலே நான் ஒரு பைசா தொடமாட்டேன். நீ நாளைக்குப் பெரிய பாடகியாவரணும். அமெரிக்கா, ஆப்பிரிக்காவெல்லாம் போய்ப் பாடணும்னுதான் ஆசைப்படறேன். எனக்காகவா இப்படி ஆசைப்படறேன். சொல்லு... எல்லாம் உனக்காகத்தான்..."

புவனா தாயைக் குழப்பத்துடன் பார்த்தாள். பாவம், அம்மா. அவள் தனக்காக என்னதான் செய்து கொள்கிறாள். பொரியலைக்கூடக் கணவன், குழந்தைகளுக்குப் பரிமாறிவிட்டுத் தான் வெறும் சோறு தின்பாள். அம்மாவுக்கு இருக்கும் குரலுக்கு அவளே பெரிய பாடகியாகி இருக்கலாம். ஆனால் அவள் தன்னைப் பிரபலமாக்கிக் கொள்ளவா முயல்கிறாள். மகளுக்காக எவ்வளவு செய்கிறாள்.

யோசித்துப் பார்த்தால் அப்பாவின் நல்லவனாகவாழும் ஆசைதான் சுயநலமுள்ளதாகத் தோன்றியது. அம்மாவின் மகளைப் பிரபலப்படுத்தும் ஆசை நியாயமானதாகப் பட்டது.

புவனா இப்போது அப்பாவை மறந்து, அம்மாவைப் பற்றிச் சிந்திக்கத் துவங்கினாள். அம்மாதான் எவ்வளவு அழகு. மஞ்சள் பூசிக் குளித்த முகத்தில், பெரிய குங்குமப் பொட்டுடன் அம்மா வந்து நின்றாலே சபை நிறைந்துவிடும். நிறம் மட்டும்தானா, உயரம், வாளிப்பு... ஒவ்வொரு அம்மாக்கள் உடம்பு பருத்து, சதை சுருங்கி, எப்படியெல்லாம் ஆகிவிடுகிறார்கள். ஆனால் அவள் அம்மாவைப் பார்த்தால் அக்கா மாதிரித்தான் இருக்கும். அம்மா தலை பின்னுவது அபூர்வம். தலையில் நுனிமுடிச்சுத்தான் இருக்கும். அதுவே இடுப்புக்குக் கீழே தொங்கும்.

இந்த அலட்சியமான உடை அலங்காரத்தை எடுத்துவிட்டு, சினிமா நடிகை போல மேக்—அப் போட்டால் அம்மா எப்படிப் பளபளப்பாள்! வாய்ப்பிருந்தால் அவள் கட்டாயம் பெரிய நடிகையாகியிருப்பாள்.

குரல் மட்டுமென்ன சாதாரணமா... அந்த இனிமை, ஐந்தரைக் கட்டை சுருதியில் அலட்சியமாகச் சஞ்சரிக்கும் திறமை... அம்மா மனம் வைத்திருந்தால் எவ்வளவு பிரபலமான பாடகியாகியிருக்கலாம்.

பாவம் அப்பாவுடன் இந்தவீட்டில் குடும்ப வாழ்வில் அடங்கிவிட்டாள். அதனால்தான் பதைப்புடன், 'புவனா, நான் என் வாழ்க்கையிலே அடைய முடியாத அத்தனையும் உன் மூலமாகத்தான் அடைஞ்சாகணும். என்னால் முடியலைன்னாலும், நான் பெற்ற பெண் மூலமாகவாவது பிரபலமாகணும். உனக்கும் எனக்கும் சேர்த்து நிறைய ஆசை லட்சியமெல்லாம் வச்சிருக்கேன் புவனா, என்னை ஏமாத்திடாதே' என்று கெஞ்சுகிறாள்.

அம்மாவை ஏமாற்றவே கூடாது. அப்பாவாவது எதிலும் திருப்தி அடைபவர். அம்மா அப்படியில்லை. அப்பா நிறைவேற்றாத அவள் ஆசைகளை நானாவது நிறைவேற்றணும்.

(தொடரும்)



# எல்லாம் ஒரு கலை!

"டிபன் காப்பி ரெடி."

— என்று உள்ளிருந்தபடியே தனது வெண்கலக் குரலில் உரத்துச் சொன்னான் கணபதி.

வசந்தாவுக்குத் துக்கம் குமுறிக் கொண்டு வந்தது. இதே தினம், போன வருடம் எப்படி இருந்தோம்! ஃபாக்டரி ஒன்றில் பொறுப்பான டெக்னிகல் பதவி; நல்ல சம்பளம்; சின்ன ஆண் குழந்தை. சீராகச் செல்லும் தார் ரோ மாதிரி வாழ்க்கை; என்ன போதாத காலமோ — இல்லை யார் கண் தான் பட்டுவிட்டதோ, மெஷினில் வேலை செய்யும்போது, கணபதி காலில் இசகுபிசகாக அடி பட்டு, இடது கால் ஊனமாகிவிட்டது. ஏற்கெனவே அவன் மீது காட்டம் கொண்டிருந்த பெரிய மானேஜர், இதுதான் சாக்கு என்று வேலையை விட்டு நீக்கிவிட்டார்.

சரி, வேலை போனதுதான் போகட்டும். அக்கடா என்று உட்கார்ந்து கொண்டு கவனிக்கும்படியான வேறு வேலை கிடைத்ததே. வசந்தாவின் மாமா இரக்கப்பட்டுச் சிபாரிசு செய்தார்; சம்பளம்கூடப் பரவாயில்லை. ஆனால் பிடிவாதம் பிடித்தான் கணபதி. இந்த மெஸ்ஸைத்தான் ஆரம்பிப்பேன் என்று.

"இன்னிக்கு ரொம்ப ஜோரா கேசரி வந்திருக்கு. போண்டாவில்தான் கொஞ்சம் உப்புக் கம்மி. ஆனால் சாம்பார் தொட்டுக் கொண்டால் சரியாக இருக்கும்!" என்று வியாக்கியானம் செய்தபடி, புன்னகையுடன் இலையில் பரிமாறலானான்.

"சே, என்ன வேலை இது!" என்று அவள் ஆத்திரத்தில் வெடித்தாள். "பேசாமல் மாமா கொடுத்த வேலையில் சேர்ந்திருக்கலாம்..."

"அப்புறம்?"

"நான் என்ன கதையா சொல்றேன்!"

"கதை மாதிரிதானே அளக்கிறே? எனக்குத் தெரியாதா எந்த வேலை செய்யணுமென்று?" இப்போது கணபதியின் குரலில் ஒரு கடுமை தெரிந்தது.

ஆனால் வசந்தா விடவில்லை. வெறுப்புடன் தொடர்ந்தாள். "என்னவோ ஆளப் பிறந்த

# தமயந்தி

கை என்று சொல்வார்கள். இங்கே என்னவென்றால் மெஷின் பிடித்த கை, கரண்டியைப் பிடிக்கிறது!''

மனைவியைச் சமாதானம் செய்தான் கணபதி. ''இதுவும் மெஷின் ஆபரேட் பண்ணுகிற மாதிரி ஒரு கலைதான். பாரேன், சின்ன ஊராயிருக்கு. இனி ரொம்பப் பெரிசா ஆகிவிடும்!''

''நிச்சயம் உங்கள் சமையலால் இல்லை!''

கணபதிக்கு கோபம் பொங்கியது. அதற்குள் தூங்கி எழுந்த சுரேஷ் அவன் கால்களைக் கட்டிக் கொண்டான்.

அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு வசந்தா உள்ளே சென்றாள்.

**க**ணபதி மௌனம் சாதித்தான். இந்த இடத்தில் தொழில் ஆரம்பித்து ஆறு மாசத்துக்கு மேல் ஆகிவிட்டது. மனைவியின் கேலியும் குத்தலும் அவனுக்குப் பழகிப் போய் விட்டன. சொல்லப் போனால், அவை 'ஒரு டானிக்' மாதிரிகூட.....! இன்று சாம்பசிவம் வீட்டில் நிச்சயதார்த்தம்...... பு ரு ட் சாலட்டுக்கு மாம்பழம் நறுக்கிக் கொண்டிருந்தான்.

சட்டென்று அவனுககுத் தன் பெரியப்பா ஞாபகம் வந்தது. பேனாக் கத்தியில், முழுத் தோலையும் 'ஒற்றை'யாகவே நறுக்கி விடுவார். தோல் நீளமாக வளைந்து வளைந்து காட்சி அளிக்கும். வாய் பிளந்து ஆச்சரியப்பட்டுப் போவான் கணபதி.

அதுவும் ஓர் அழகுதான்.

வசந்தா திடீரென எழுந்தாள். ''சரி, நான் கிளம்பறேன். நேரமாகிவிட்டது!''

''என்ன வசந்தா இது? சாம்பசிவம் மெனக்கெட்டுக் கூப்பிட்டிருக்கார். நீயும் இருந்தால் ஒத்தாசையா இருக்கும்.''

''நான் வரலே. மாலினி வீட்டில சுமங்கலிப் பிரார்த்தனை. லெட்டர் வந்ததே பார்க்கலியா...?''

மணமான புதிதில், இதே அக்கா மாலினியை, ''ஐயோ! ரொம்பப் பெரிய இடம்!'' என்று ஒதுக்குவாள் வசந்தா. இப்போது...

''மாம்பழம் நறுக்கறயா? எனக்குப்பா...!'' என்று சுரேஷ் வந்து, இரண்டு விள்ளல்களைப் போட்டுக் கொண்டான்.

''கிட்டே போகாதேடா! இப்பவே உனக்கு ட்ரெயினிங் கொடுத்துவிடப் போகிறார் அப்பா!'' என்று பையனைத் தன் பக்கம் இழுத்தாள். ''உனக்கும் ட்ரெஸ் பண்ணி விடுகிறேன்!''

**மா**லினி வீட்டில் தட்டுப்பட்ட நெருங்கிய உறவினர்களுடன் கலந்து கொண்டாள் வசந்தா. மிக ஜாக்கிரதையாகக் கணவன் 'வேலை' தெரிந்துவிடக் கூடாது என்பதில் கவனமாக இருந்தாள். சிலர் தூண்டித் துருவிக் கேட்டபோது கூட ''ஆமாம்... மெஸ் வைக்கலாம்னு யோசனை இருக்கிறது!'' என்று மழுப்பினாள்.

கணபதியின் மீது சீற்றம் பொங்கி வந்தது. சே! சமையல் 'கலை'யாம்; மண்ணாங்கட்டியாம்!

வந்த வேலை முடிந்தது. சாப்பிட்டாயிற்று. ரவிக்கைத் துண்டைப் பெற்றுக் கொண்டாயிற்று.

திடீரென ஞாபகம் வந்து மாலினி, ''அடடே! 'திலகம்' பத்திரிகை பார்த்தியோ? என் போட்டோ வந்ததே!'' என்றாள்.

வசந்தா அசுவாரஸ்யமாக ''அப்படியா?'' என்றாள்.

''இதோ பார்! என் தயாரிப்புக்கு 'பர்ஸ்ட்' பிரைஸ்!'' — விரித்த பக்கத்தில் அலங்காரங்களுடன் கூடிய கேக்; உதட்டுச் சாயமும் நீள முகமுமாகப் பெருமை ஜொலிக்க மாலினி.

''அட! தேவலையே! கேக் கூடச் செய்வாயா?''

''எவ்வளவு பேர் கலந்து கொண்டார்கள். யார் தெரியுமோ ஜட்ஜ்? 'லேடீஸ் வொர்ல்ட்' மிஸஸ் புஷ்பம்! அவள் ஸெலக்ட் பண்ணி, டேஸ்ட் பண்ணி பிரைஸ் தந்திருக்கிறாராக்கும்!'' என்று மளமளவென்று பெருமை பேசிக் கொண்டே போனாள்.

''மாலினி! ஏய் மாலினி!'' என்று உற்சாகத்துடன் அப்போது அங்கு வந்த அவள் கணவன், வசந்தாவைப் பார்த்துச் சிறிது தயங்கினான்.

''இவ என் தங்கை வசந்தா! உங்களுக்கு மறந்து போச்சா!'' மாலினி புஸ்தகத்தைப் பொக்கிஷம் போல் டிராயருக்குள் வைத்தாள். ''என்ன சமாசாரம்?''

''அதில் வந்த யோகம்தான்! உன் பிரிப்பரேஷன் 'குமார் பேக்கரி'யில் அக்ஸெப்ட் ஆகிவிட்டதாம்! குமாரே போன் பண்ணிச் செக்கும் தந்தார்!''

''ஈஸ் இட்!'' என்று ஆவல் பொங்க அந்தச் செக்கை வாங்கிக் கொண்டாள். சந்தோஷமாகப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். சின்னஞ்சிறு குழந்தையைத் தாய் தடவிக் கொடுப்பது மாதிரி, மெல்லத் தடவிக் கொடுத்தாள்.

''ஸோ மாலினி! நான் வரேன். ஆல் த பெஸ்ட்!''

அமைதியாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தாள் வசந்தா. மேலே வளர்ந்து கொண்டேயிருக்கும் பிசினஸ், சொகுசு பங்களா, அம்பாசிடர் கார். இருந்தும் மாலினி கேக் தயார் செய்கிறாள். அதன் மூலம் வரும் பணத்தை அவமதிப்பதில்லை; மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறாள். சொற்பத் தொகை.

'கேக் செய்யறது ஒரு ஆர்ட் தெரியுமோ?'' என்று மாலினி பீற்றிக் கொண்டது காதில் ஒலித்தது.

'உண்மைதான். ஆர்ட்தான். பக்குவமாகக் கேசரி செய்வது மாதிரி....' வசந்தா மனத்துள் நினைத்தபடி ஒரு தீர்மானத்துடன் வீடு திரும்பினாள்.

** அச்சங்களை உனக்குள்ளே வைத்துக் கொள்; துணிவுகளைப் பிறருடன் பகிர்ந்து கொள்.

## புதுக்கவிதைப் போட்டி — 9

பெங்களூர் நகரில் SAARC மகாநாடு நடந்த போது, நகரை அழகுபடுத்தச் சுமார் அறுநூறு பிச்சைக் காரர்களைப் பிடித்து, பிச்சைக்காரர் விடுதிகளில் பூட்டினர்! அங்கு இவர்களுக்கு ராஜபோகமாகச் சாப் பாடு போடப்பட்டது! காரணம், இம்மாநாட்டுக்காக வருபவர்களுக்காக ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில் தயாரிக்கப்பட்டிருந்த உணவுகள் நிறைய மிச்சமாகி விட்டன. இவற்றை வீணாக்காமல், அப்படியே பிச்சைக் காரர் விடுதிகளுக்கு எடுத்துச் சென்று பிச்சைக்காரர் களுக்குக் கொடுத்துவிட்டது அரசு! அடிக்கடி இப்படிப் பட்ட மாநாடுகள் நடக்காதா என்று பிச்சைக்காரர்கள் நினைத்திருப்பார்கள்!

— இது கடந்த 4.1.87 கல்கி இதழில் வெளியாகியிருந்த துணுக்குச் செய்திகளில் ஒன்று. இதற்கான கவிதைப் போட்டிக்கு வந்த கவிதைகளில் தேர்ந்தெடுக்கப்பட்டவை இதோ:

## இரண்டாம் பரிசுக் கவிதை

அதிகார வர்க்கத்திற்கு
'அஜீரணம்' கண்டதால்,
பெங்களூர்ப் பிச்சைக்காரர்களுக்கு
அடித்தது யோகம்!

நட்சத்திர உணவு
நாளும் கிடைத்தால்
பிச்சைக்காரர் விடுதியில்
அட்மிஷன் வாங்கவும்
அரசியல்வாதிகளைத் தேடி
அலைய வேண்டும்!

— ஜி. பிரகாஷ்,
அரசு ஆதி திராவிடர் நல மேல்நிலைப் பள்ளி,
கன்னிகாபுரம்,
சென்னை—12.

# அரசாங்கம் அசிங்கமானது

'சார்க்' மாநாட்டில்
பேச்சு வார்த்தைகளின் இறுதியில்
மிஞ்சியது உணவுதான்.
ஜெயவர்த்தன மீதி வைத்த
சோற்றுக்காக
பெங்களூரில் பிடிபட்ட
தமிழ்நாட்டுப் பிச்சைக்காரர்களுக்குள்
தடியடி.

— துரை சண்முகம்
இரண்டாமாண்டு இளங்கலை தமிழிலக்கியம்
குடந்தை அரசு ஆடவர் கல்லூரி,
கும்பகோணம்—612 001.

## முதல் பரிசுக் கவிதை

அசிங்கமாயிருக்கின்ற
பிச்சைக்காரர்களை
அப்புறப்படுத்தியபோது,
நகரம்
அழகாயிருந்தது.
மிச்சப்பட்டதால் மட்டுமே
பிச்சையாகப் போட்டதால்
அரசாங்கம்
அசிங்கமாய்
ஆனது.

— ஆர். இந்துமதி (எம்.காம்.)
முதலாமாண்டு,
(அஞ்சல்வழிக் கல்வி)
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
...ரைக்குடி.

இந்தப் பெங்களூர் விஷயம்
இனக்கூலி பார்த்து
அரைவயிற்றுக் கஞ்சிக்குத்
தடுமாறும் எனக்கு,
முன்கூட்டியே தெரியவில்லை
தெரிந்திருந்தால்....
பிச்சைக்கார வேடம் புனைந்தாவது
அரிய உணவின் அறுசுவையை
அறிந்து வந்திருப்பேன்.

— எஸ். ஜோசப்,
பி.எஸ்ஸி (கணிதம்) இரண்டாமாண்டு,
அருள் ஆனந்தர் கல்லூரி,
மதுரை

## ராஜாஜி வாழ்க்கை வரலாறு — III

ராஜ்மோகன் காந்தி

• "அஸ்தித் துகள்கள் என்னை ஈர்த்து இழுத்தன."



காந்தியின் அஸ்தி அடங்கிய கலசத்தைக் கரத்தில் ஏந்திக் கொண்டு பிப்ரவரி 12—ம் தேதி காலை காரில் ஏறிய ஸி. ஆர். பாரக்பூர் சென்றடைந்தார். அங்கே ஆற்றங்கரையில் பத்து லட்சம் மக்கள் திரண்டிருந்தனர். வேறு பலர் மோட்டார் படகுகளிலும் நீராவிப் படகுகளிலும் வெறும் துடுப்புப் படகுகளிலும் ஏறி ஆற்றில் மிதந்து கொண்டிருந்தனர். ஸி. ஆர். அஸ்திக் கலசத்தை ஏந்திக் கொண்டு, தயாராகக் காத்து நின்ற மோட்டார் படகில் ஏறினார். அதிலிருந்தபடியே, லட்சக்கணக்கான மக்கள் மூச்சு விடவும் மறந்து போய் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருக்க, ஆற்றங்கரையிலிருந்த காவலர்கள் ஒரு துள்ளலுடன் அட்டென்ஷனில் நின்று துப்பாக்கி ஏந்திய கரங்களுடன் மரியாதை செலுத்த, கலசத்தைக் கங்கையில் கவிழ்த்தார். அப்போது அவரே சற்றுத் தடுமாறிக் கங்கையில் கவிழ்ந்து விழப் போனார். மெய்க்காவலர்கள் சட்டர்ஜியும் சிங்காரவேலுவும் அவரைப் பிடித்துக் கொண்டனர். "அஸ்தித் துகள்கள் என்னை ஈர்த்து இழுத்தன" என்றார் ஸி. ஆர்.

அன்றிரவு வானொலியில் பேசினார்: "எல்லாம் முடிந்துவிட்டது! உலகமே வெற்றிடமாகப் போய்விட்டது! பயங்கர வெறுமை நம்மைச் சூழ்ந்திருக்கிறது.... நம்மிடம் அன்பு காட்டப்பட வேண்டும் என்று ஓர் உரிமையாக எதிர்பார்க்காதீர்கள். மாறாக நீங்கள் அன்பு செலுத்தத் தொடங்குங்கள். அப்போது உங்களை அன்பு தானாகவே நாடி வரும். இதுதான் உலக நியதி; இயற்கையின் சட்டம். எந்தப் புதிய உத்தரவு அல்லது விதிமுறையும் இதனை மாற்ற முடியாது. இந்த இயற்கை நியதியை நாம் பின்பற்றாவிட்டால், இதை நமக்குக் கற்றுக் கொடுத்த காந்திஜியோடு இந்தச் சட்டத்தையும் நாம் சாக அனுமதித்துவிட்டதாகும். அந்நிலையில் நாம் அவரைக் கொன்ற கொலையாளியின் கூட்டாளியாகிவிடுவோம். மாறாக, நாம் இந்த இயற்கை நியதியை மதித்து, இந்தச் சட்டத்தை மனப்பூர்வமாகப் பின்பற்றினால் காந்திஜி நமது உள்ளங்களில் உறைவார். நம் மூலம் அவரும் வாழ்ந்து கொண்டேயிருப்பார்.

மகாத்மாவுக்குப் போதிய பாதுகாப்புத் தரப்படவில்லை என்பதற்காகப் பிரதமர் ஜவாஹர்லால் மீதும் உள்துறை அமைச்சர் பட்டேல் மீதும் பலர் குற்றம் சுமத்தினார்கள். ஸி. ஆர். அவர்கள் சார்பில் ஆணித்தரமாக வாதாடினார்: "தென் ஆப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் கடந்த நாற்பது ஆண்டுகளாக மகாத்மா எத்தனையோ ஆபத்துக்களுக்கு உள்ளாகவில்லையா? அவரது உயிரை இந்திய அரசா காப்பாற்றியது? கடந்த சில ஆண்டுகளாக அபரிமிதக் கோபதாபங்கள் புயல்போல் உருவாகவில்லையா? அப்போதெல்லாம் இந்திய அரசா காந்தியைக் காப்பாற்றியது? கடவுள் அவரை அழைத்துச் சென்றுவிட்டார் என்பதற்காக இந்திய அரசின் மீது பழி சுமத்துவது மடமை. இந்திய அரசு, மெய்க்காவலர்களை அவர் வசிக்கும் இடத்திலும், உலா வரும் தோட்டத்திலும் நிறுத்தியிருந்தால், ஸி.ஐ.டி.க்களைப் போட்டிருந்தால் அது ஆபாசமாக இருந்திருக்குமல்லவா? காந்திஜிக்கு அதுவே வாழ்க்கையைத் தொடர முடியாமல் செய்திருக்கும்."

சென்னை மாகாணம் அவர் நினைவிலிருந்து என்றும் நீங்கவில்லை. முதல் மந்திரி ஓ.பி. ராமசாமி ரெட்டியார் சுதந்திரப் போராட்டத் தியாகிகளுக்கு அரசு நிலங்களைப் பட்டா வழங்க உத்தேசித்திருப்பதாக அறிந்ததும் அவரைக் கடிந்து கொண்டார் ஸி. ஆர்.: "நீங்கள் சரியான காரியத்தைச் செய்யவில்லை என்றே அஞ்சுகிறேன். உங்

## ஆளுனர் அலங்காரத்துக் அல்ல!



"கட்சிக் கட்டுப்பாட்டை மீறிட்டார்'னு அந்த எம்.எல்.ஏ.யை சஸ்பெண்ட் பண்ணிட்டாங்க!"

"ஏன்?"

"கட்சியிலே கட்டுப்பாடே இல்லேன்னு சொன்னதுக்காக!"

— எஸ். முகம்மது யூசுப்

களுடைய திட்டம் காங்கிரஸின் லட்சியங்களுக்கு முரணானது என்பது ஒருபுறமிருக்க, இது நிர்வாக ரீதியிலும் உங்களுக்குப் பெரும் பிரச்னைகளை ஏற்படுத்தும். நீங்களும் உங்கள் சகாக்களும் இந்தத் திட்டத்தை வாபஸ் பெறுவதற்கான சாத்தியக் கூறுகளை யோசிப்பீர்கள் என்று நம்புகிறேன்.''

பிப்ரவரியில் சென்னை மாகாணம் முழுவதும் மதுவிலக்கு அமலாயிற்று. இது ஒரு சாதனை புரிந்த உணர்வை ஸி. ஆருக்கு ஏற்படுத்தியது. ''சென்னை மாகாணத்தில் மதுவிலக்கு என்ற தார்மீகக் கட்டடத்தைக் கட்டி முடிப்பது எனது லட்சியக் கனவாக இருந்தது'' என்று சென்னை மாகாண நிதி அமைச்சர் கோபாலரெட்டிக்கு ஸி. ஆர். எழுதினார்.

'கல்கத்தாவின் கவர்னர் மாளிகையில் ராஜாஜியைவிட எளிமையான வாழ்க்கை நடத்தியவர் கிடையாது' என்று எழுதினார் ஒரு பத்திரிகையாளர். விருந்தினருக்கு ராஜாஜி அளித்ததெல்லாம் முந்திரிப் பருப்பும் காப்பியும் மட்டுமே. வேட்டைக்குப் போவது பற்றிய பேச்செல்லாம் பழங்கதையாகிவிட, கவனிக்கப்படாத ஒரு மருத்துவமனை அல்லது புறக்கணிக்கப்பட்ட பள்ளிக்கூடம் பற்றித்தான் உரையாடல் நிகழ்ந்தது. மாற்றம் ஏற்பட்டது, கவர்னர் அணிய வேண்டிய உடை என்ன என்பதில் மட்டுமல்ல; வேறு பல அம்சங்களிலும் தான். ஒரு மருத்துவமனை ஓரிடத்தில் தேவைப்படுகிறது என்றால், அதற்காக ஒரு தன வணிகருக்கு போன் செய்து கணிசமான நன்கொடையைப் பெற்றுத் தருவார் ஸி.ஆர். மறக்கப்பட்ட இரு சுதந்திரத் தியாகிகள் பற்றி நாளிதழில் யாரேனும் ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் எழுதியிருந்தால், அதைக் கண்ணுற்றதும், கவர்னர் தமது பொறுப்பில் செலவழிக்கக் கூடிய அரசு நிதியிலிருந்து ஒரு தொகையை அவர்களுக்கு அனுப்பி வைப்பார்.

பிரஃபுல்லகோஷ் போலன்றி புதிய முதன் மந்திரி பிதான்ராய், ஸ்திரமான அமைச்சரவையை நிறுவினார். ராஜாஜி — ராய் தொடர்பு நட்புறவோடு விளங்கினாலும் கவர்னருக்கும் கோஷுக்கும் இடையே முன்பு இருந்தது போன்ற அந்நியோன்னியம் இப்போது நிலவவில்லை. சட்டப்படி எது சரியோ அப்படி நடந்து கொண்டால் போதும் என்ற அளவுக்கு கவர்னர் — முதல்வர் உறவு இறங்கி வந்துவிட்டது. ஸி. ஆரின் விசேஷ கவனத்துக்கும் ஈடுபாட்டுக்கும் அவசியத்தை ஏற்படுத்திய இனக்கலவரங்கள் முடிந்து போய்விட்டன. மேலும் பிதான் ராய் தமது அரசியல் பலத்தை உணர்ந்திருந்ததால் கவர்னரைச் சார்ந்து அவர் பலத்தில் நிற்க வேண்டிய நிர்ப்பந்தம் அவருக்கு இருக்கவில்லை. அரசுக் காரியதரிசிகள் முன்போலக் கவர்னரிடம் பிரச்னைகளை விவாதிக்க வரவில்லை; ஃபைல்களைக் கொண்டுவரவுமில்லை. வங்கமும் நாட்டின் இதர மாகாணங்கள் போல ஆகிவிட்டது.

ஆனாலும் ஓர் அவசியம் ஏற்பட்டால் ஸி. ஆர். தமது அதிகாரத்தை நிலை நிறுத்தத் தவறவில்லை. விதிமுறை, நடைமுறைகளை மீறி, பிதான் ராய் சில நியமனங்களைச் செய்ய முற்பட்டபோது ஸி. ஆர். அப்படிச் செய்யக் கூடாது என்று ஆலோசனை வழங்கினார். ராய் விட்டுக் கொடுத்தார் — தாற்காலிகமாகவேனும்! கவர்னர் மாளிகையின் விசாலமான தோட்டத்தின் ஒரு பகுதியில் அமைச்சர்களுக்கு வீடு கட்ட வேண்டும் என்று ராய் கூறியபோது, அதை ஸி. ஆர். 'கூடாது' என்று தடுத்துவிட்டார். முதன் மந்திரி நேருவின் ஆதரவை நாடினார். ஆனால் நேரு, ''ஸி. ஆர். கூறுவதே சரி'' என்று சொல்லிவிட்டார். மற்றுமொருமுறை ராய், இரு அமைச்சர்களைப் பதவி நீக்கம் செய்ய முற்பட்டபோது, ஸி. ஆர். 'அமைச்சரவை முழுவதுமே ராஜினமா செய்துவிட்டு, அந்த இரு அமைச்சர்கள் நீங்கலாக மற்றவர்கள் மீண்டும் பதவிப் பிரமாணம் ஏற்கலாம்' என்றார்! இந்தச் சடங்கு நிறைவேறியது!

மேற்கு வங்க கவர்னருக்கு ஒரு வசதி உண்டு. ஆண்டுக்கு ஒருமுறை சில காலம் டார்ஜிலிங்கில் உள்ள கவர்னர் மாளிகையில் வசிக்கலாம். ஸி. ஆர். அங்கு மூன்று வாரங்கள் இருந்தார். தொடர்பு விட்டுப் போயிருந்த பழைய நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதினார். காலிம்பாங்குக்கு ஒரு பயணம் மேற்கொண்டு திரும்பினார். பள்ளிக்கூடங்களையும் ஆஸ்பத்திரிகளையும் பால் பண்ணைகளையும் பார்வையிட்டார். அடிக்கடி காஞ்சன கங்கை சிகரத்தை வைத்த கண் வாங்காமல் நோக்கியபடி யோசனைகளில் ஆழ்ந்து போனார்.

கல்கத்தா கவர்னர் மாளிகைக்கு முடிவில்லாமல் விருந்தினர் வந்த வண்ணம் இருந்தனர். அயர்லாந்து ஜனாதிபதி, விசுவேசுவரய்யா, ஸர். ஸி.வி. ராமன், புது தில்லியிலிருந்து மத்திய அமைச்சர்கள், ஹிந்துப் பத்திரிகையில் பணிபுரிந்து வந்த ஸி. ஆரின் மகன் கிருஷ்ணசுவாமி ஆகியோர் தவிர, ஒருமுறை மவுண்ட்பேட்டன் தம்பதியும் தங்கள் ஊழியர்கள், காரியஸ்தர்கள் பட்டாளத்துடன் வந்து சேர்ந்தனர்.

(தொடரும்)

தமிழாக்கம்: இ. ராஜேந்திரன்

** வெற்றி என்பது ஏராளமான கவலைகளை மூடி மறைத்துவிடும்!

## மாயவரம் பைனான்ஷியல்
### சிட் கார்ப்பொரேஷன் லிமிடெட்

(1913-ம் வருட இந்திய கம்பெனிகள் சட்டத்தின் கீழ் இணைக்கப்பட்டது)

பதிவு அலுவலகம் : 13-H, கச்சேரி ரோடு

நிர்வாக அலுவலகம் : 13-A 1, கச்சேரி ரோடு

மயிலாடுதுறை-609 001

தமிழ்நாடு

ரூ. 10,000 முதல் ரூ. 5 லட்சம் வரை உயர்தொகை ஏலச்சீட்டுகள் நடத்துவதில் எவருக்கும் நாங்கள் இரண்டாவதல்ல.

31-12-1986 முடிய மொத்த சீட்டு ஒப்பந்த நிதி
ரூ. 43 கோடி

மயிலாடுதுறை
18.02.1987

R. கல்யாணசுந்தரம்
மானேஜிங் டைரெக்டர்.

(FOURTH ANNIVERSARY)
IN EVER LOVING MEMORY OF



**7.11.22 24.2.83**

**Prof. M.S. RAMAMOORTHY D.I.C. (LON); M.I.E.E.E. (U.S.A.); M.I.E. (IND); I.R.S.M.E.**

Retd. Dy. C.M.E./RAILWAYS & PRINCIPAL/TTS/S.C. RLY., SC

*Inserted by*

Sorrowing beloved wife and other family members.

"முத்து...."

பின்னாலிருந்து ஒரு குரல் ரகசியமாக அழைத்தது. முத்து திடுக்கிட்டான். திரும்பிப் பார்த்தான். மாயகிருஷ்ணன் நின்றிருந்தார்.

"முதலாளி!" என்றான். உருட்டுக் கட்டையைப் பின்னால் மறைத்துக் கொண்டான்.

"உருட்டுக் கட்டை எதுக்குடா?"

"ஒருநிமிஷம் இருங்கமுதலாளி...." முத்து குரலை இறக்கிக் கொண்டான். "யாரோ இந்தப் பக்கம் வராப்பல இருக்கு.... இதால ரெண்டு தட்டுத் தட்டி விசாரிச்சுடறேன்" என்றான். மாயகிருஷ்ணனின் பதிலுக்குக் காத்திருக்காமல், சட்டென்று ஒரு தாவுத் தாவி. இரண்டு கால்களையும் அகல விரித்துப் புதர்ப் பாதையின் முடிவில் தயாராய் நின்றான்.

குனிந்து குனிந்து நடந்த நந்தகுமாரைக் கடைசி நிமிடத்தில் உள்ளுணர்வு எச்சரித்தது. திடீர்லகான் போட்டு நின்றான். நிமிர்ந்து பார்த்தான். கண்களை உருட்டிக் கொண்டு ஐயனாரே உயிரோடு வந்து எதிரே நிற்பது போல் நின்ற முத்துவைப் பார்த்ததும் திடுக்கிட்டான்.

"யார்ரா நீ?"

நந்தகுமாருக்கு வார்த்தைகள் சிக்கின. பயத்தில் உடம்பு முழுக்க வியர்த்துவிட்டது.

"கேக்கறேன் இல்லே? இந்தப் பக்கம் எதுக்கு வந்தே?"

"வேலைக்குப் போய்க்கிட்டிருக்கேன்..." திணறிச் சொன்னான்.

ரெண்டு தட்டுத் தட்டியிருக்கலாமில்ல?" முத்து உருட்டுக் கட்டையை ஏமாற்றத்துடன் கீழே எறிந்தான்.

"முண்டம்... நல்ல வேளைல நான் வந்து சேர்ந்ததால இதோட போச்சி. அவன் யாரு தெரியுமில்ல? யூனியன் லீடரு பாண்டியன் கட்டியிருக்கானில்ல அறுத்தவ ஒருத்தியை. அவளோட பையன்... மேலே கை வைச்சிருந்தே, அதோட தொலைந்தோம். என்ன ஏதுன்னு விசாரிச்சுக்கிட்டுப் பாண்டியன் இங்கே வந்தா நம்ம ரகசியமெல்லாம் பொத்துக்கிட்டு வெளியே வந்துரும்...."

"கண்ணை நல்லாத் தெறந்து வச்சுக்கிட்டுக் காவல் இருக்க வேண்டிய வேலையாச்சே மொதலாளி.... எந்த நேரம் போலீஸ் மோப்பம் பிடிச்சுக்கிட்டு வந்துடுமோன்னு பயந்து பயந்தில்லே சாக வேண்டியிருக்கு..."

"உங்கண்ணன் ரத்தினம் ஒரு நாள் கூட இப்படிச் சலிச்சுக்கிட்டதில்லே முத்து...."

"மொதலாளி... அப்புறம் அந்தப் பத்து ரூபா கேட்டேனே மொதலாளி...."

"பத்து ரூபா என்ன? இருபதாவே வச்சுக்க...." மாயகிருஷ்ணன் பாக்கெட்டிலிருந்து இரண்டு பத்து ரூபாய்களை எடுத்து நீட்டினார்.

"வெளையாட்றீங்க மொதலாளி.... பத்தாயிரம் கேட்டேங்க...."

"ஓ.... வீடு பிரிச்சுக் கட்டணும்னு

# 17 சின்னச் சின்ன கனவுகள்

"யார்கிட்டே கதை விடறே? நேராப் போறதை விட்டுட்டு இந்தப் பக்கம் ஏன் வந்தே? பொய் சொன்னே, இதாலயே மண்டையைப் பேத்துருவேன்...."

"முத்து!" மாயகிருஷ்ணனின் குரல் அவனைத் தடுத்தது. ஓங்கிய கையை இறக்கினான். அவனை முறைத்துக் கொண்டு மாயகிருஷ்ணன் முன்னால் வந்து நின்றார். உதடுகளில் ஒரு சுருட்டைப் பொருத்திக் கொண்டார்.

"தம்பி, ஒம்பேரு என்ன?" ஜப்பான் லைட்டரால் சுருட்டைப் பற்ற வைத்தார்.

"நந்தகுமார்...."

"இத பாரு.... பக்கத்தில மருந்து கோடௌன் இருக்கு.... இந்தப் பக்கம்லாம் வரக்கூடாது.... நேரா வழி இருக்கிறப்ப, முன்னால எல்லாம் விழுந்து பெரண்டுகிட்டு இந்தச் சுத்து வழில ஏன் வர்றே? ஓடு.... ஓடு....."

நந்தகுமார் கூண்டிலிருந்து விடுதலை செய்யப்பட்ட பறவைபோல் பறந்தான்.

"என்ன மொதலாளி விட்டுட்டீங்க?

சொன்னே இல்ல.... எப்பத் தாணும்னு எனக்குத் தெரியும்.... சும்மாத் தொந்தரவு பண்ணாதே முத்து...."

"சீக்கிரம் கொடுத்திட்டா நல்லா இருக்கும் மொதலாளி...."

"என்னடா பேச்செல்லாம் ஒரு மாதிரி போகுது? உங்கண்ணன் என்கிட்டே இத்தனை நாட்கள் வேலை செய்யறானே, ஒருநாள் வாய் திறந்து எதுவும் கேட்டதில்லே, தெரியுமா?"

மாயகிருஷ்ணன் கார்க்கதவை அறைந்து சாத்திக்கொண்டதில் அவர் அதிருப்தி தெரிந்தது.

பாக்டரியில் நந்தகுமாருக்கு இன்னும் அடிமனத்தில் அந்த நடுக்கம் இருந்தது. காலையில் உருட்டைக் கட்டையை ஓங்கிக் கொண்டு வழிமறித்து நின்ற முரடனின் நிழல் எப்போதும் தன் மீது விழலாம் என்ற அச்சத்தோடு அவ்வப்போது திரும்பிப் பார்த்துக் கொண்டான். கைகள் மட்டும் பழக்கத்தில் வேலை செய்தன.



ஃபிரேம்களில் அடுக்கிய குச்சிகள் ஒரு முள் படுக்கைபோல் துருத்தி நிற்க, அப்படியே அந்த முனைகளை மெழுகில் தோய்த்து எடுத்தான். உடனே அரைத்த சந்தனம்போல் கெட்டியாயிருந்த மருந்துக் கலவையில் முனைகள் மட்டும் படும்படி அடுத்த ஆள் கவிழ்த்துப் பிடித்து விருட்டென்று தேய்த்தான். '

வேலையில் இயந்திரத்தனத்தோடு இப்போது ஒரு ரசனையும் கூடிப் போனது போலிருந்தது.கிட்டத்தட்ட சாப்பாட்டு நேரம் நெருங்கிவிட்ட சமயம் அந்த விபத்து நடந்தது.

'பட்மர்' என்று ஒரு சத்தம். 'ஐயோ' என்று ஒரு கூச்சல். 'பரபடசரசட' என்று நெருப்பு தன் நாக்குகளைத் துருத்திக் கொள்ளும் ஒலி. அத்தனையும் அடுத்த அறையிலிருந்து வந்தன என்பதே நந்தகுமாருக்குப் புரியச் சிறிது நேரம் ஆயிற்று. ஏதோ ஒரு கை அவன் தோளில் விழுந்தது. அவனைப் பின் தள்ளிப் பிடித்துக் கொண்டது.

இப்போது பக்கத்து அறையில் திமரென்று தீப்பந்தம் ஏற்றி வைத்ததுபோல் பளீரென்ற வெளிச்சம் மழுங்கலான நிறச் சுவர்களில் பிரதிபலித்தது. நந்தகுமாரின் கண்களில் திடுக்கிடல் இருந்தது. நான்கைந்து ஆசாமிகள் அந்த அறைக்குள் பாய்ந்தார்கள். சுவரில் மாட்டியிருந்ததீயணைப்புக் கருவிகளை உருவிக் கொண்டார்கள். சற்று நேரத்தில் தீயை அடி பணிய வைத்தார்கள்.

சூழ்நிலையில் ஒரு நிசப்தமான கிலி தாக்கியிருந்தது. அந்த அறையிலிருந்து ஒரு சிறுவன் தீனமான கதறல்களுடன் வெளியே கொண்டு வரப்பட்டான். ஃபாக்டரித் தோட்டத்திலிருந்து வாழை இலைகளை அரிந்து வர ஆள் ஓடிற்று.

எல்லோரையும் விலக்கிக் கொண்டு சூபர்வைசர் எட்டிப் பார்த்தார்.,

''டேய், ஆசுபத்திரிக்கு உன்னைக் கொண்டு போறோம். ஆனா ஃபாக்டரில ஆக்ஸிடெண்ட் ஆச்சுன்னு நீ வாய் தெறக்கக் கூடாது. வீட்டில ஸ்டவ் வெடிச்சிடுச்சுன்னு சொல்லு.... புரியுதா?''

''ஐயோ.... ஐயோ.....''

''சொல்லுடா....''

''சரிங்க.... ஐயோ...''

வாழையிலையில் ஏந்தப்பட்டு அந்தச் சிறுவன் போனதும், ''த்சு.... த்சு.... பதினாறு வயசுக்கு மேலே இருந்தா இன்சூரன்ஸ் பண

சுபா

மாச்சும் வரும்....'' என்று யாரோ குரல் கொடுக்க, "ம்... ம்... மத்தவங்க எல்லாம் வேலைக்குப் போங்க...'' என்று சூபர்வைசர் உறுமினார்.

நந்தகுமார் அன்றைக்கு முழுதும் தொண்டையில் அந்தச் சம்பவத்தின் கரிப்பை உணர்ந்தான். சாப்பாடு பிடிக்காமல், டிபன் பாக்ஸை மண்ணில் கவிழ்த்தான்.

**மா**லையில் வீட்டுக்குப் போனபோது, தங்கராஜ் மல்லாந்து படுத்திருந்தான்.

"வாய்யா கலெக்டரு.... இன்னிக்கும், அழுக்குச் சட்டைதான் போட்டுக்கிட்டுப் போனியா? புதுச போட்டுக்கக் கூடாது?''

"புதுசை ஃபாக்டரிக்குப் போட்டுட்டுப் போய் அழுக்குப் பண்ண மனசு வரலை அண்ணே....''

"புதுசை போட்டுக்க கலெக்டரு.... வேணும்னு இன்னொரு செட் எடுத்திட்டு வந்துரலாம்...'' தங்கராஜ் எழுந்து உட்கார்ந்தான்.

"அண்ணே... அப்புறம் ஒரு சந்தேகம்..." நந்தகுமார் தயங்கி இழுத்தான்.

"என்ன?''

"தீப்பெட்டி ஃபாக்டரில மருந்து ரூம் எத்தனை இருக்கும்?''

"ஏன் கேக்கறே கலெக்டரு?''

"காலைல உருட்டுக் கட்டையோட ஓர் ஆள்கிட்டே மாட்டினேன், அண்ணே...'' நந்தகுமார் காலையில் நடந்ததைக் கண்களை அகட்டிக் கொண்டு, கைகளை அசைத்து அசைத்து, நாடகம் போல் சொன்னான்.

"நல்லவேளை, மொதலாளி இருந்தாரோ, உன்னை எதுவும் செய்யாம விட்டாங்களோ. அதுசரி, உனக்குப் பாண்டி அண்ணன்கூட என்ன தகராறு? ஏன் அவர்கூட பேசக் கூடாதுன்னு ஓடிப் போனே?''

"எனக்கு அந்த ஆளைப் பிடிக்கலே....''

"டேய்.... டேய்.... அப்படியெல்லாம் சொல்லாதேடா....'' தங்கராஜ் பதறினான்.

நந்தகுமார் மேலே பேசாமல் காசித் துண்டை எடுத்து இடுப்பில்கட்டிக்கொண்டு, பின்னாலிருந்த கிணற்றடியை நோக்கிப் போனான்.

காடாய் வளர்ந்த புல், எருக்கஞ்செடிகள், ஒரே ஒரு கருவேல மரம் என்று சூழப்பட்ட கிணறு அரை இருளில் கொஞ்சம் நடுக்கமாக இருந்தது. அவசரம், அவசரமாய்த் துவைக்க ஆரம்பித்தான். ஃபாக்டரியில் நடந்த விபத்தைப் பற்றிச் சொன்னால், வேலைக்குப் போகாதே என்று தங்கராஜ் சொல்லி விடுவானோ என்று பயமாயிருந்தது.

பாதி துவைத்துக் கொண்டிருந்தபோது, உள்ளேயிருந்து இன்னொரு குரல் கேட்டது.

பாண்டியன் குரல்!

இங்கேயும் துரத்திக் கொண்டு வந்துவிட்டாரோ அந்த ஆள்?

"கலெக்டரு'' தங்கராஜ் கதவருகே நின்று கூப்பிட்டான். "சீக்கிரம் வா... பாண்டி அண்ணன் வந்திருக்கார்.''

"என்னவாம்?'' என்றான், நந்தகுமார் திரும்பிப் பார்க்காமலேயே.

"கலெக்டரு, என்ன இது? கொஞ்சம் கூட மரியாதையில்லாம? சீக்கிரம் வாப்பா." தங்கராஜின் குரலில் காயப்பட்ட வேதனை இருந்தது.

**பா**ண்டியன் நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். மடியில் ஒரு பிளாஸ்டிக் கவர், பிரசவ வயிறு போலப் புடைத்திருந்தது.

நந்தகுமார் தயங்கி அறையில் நுழைந்ததும், "நந்து, ஏம்ப்பா காலையில இதோ வரேன்னு சொல்லிட்டு, நான் ஒரு நிமிஷம் மொதலாளியோட பேசிட்டு, திரும்பி வரதுக்குள்ளே எங்கே போயிட்டே?'' என்றான் பாண்டியன்.

நந்தகுமாருக்கு இடுப்பில் ஈரத் துண்டோடு பாண்டியனின் முன்னால் நிற்கக் கொஞ்சம் வெட்கமாயிருந்தது. இருந்தாலும் தன் நிலையைத் தெளிவாகப் பிரகடனம் செய்ய இதுதான் சரியான நேரம் போலவும் இருந்தது.

"வேலைக்குப் போக வேண்டியிருந்தது. நான் என்ன மாசச் சம்பளம் வாங்கறவனா? எவ்வளவு வேலை செய்யறேனோ அவ்வளவு தான் கூலி....''

"நந்து..." தங்கராஜ் அதட்டினான். "பெரியவங்ககிட்டே மரியாதையாப் பேசணும்னு உனக்குத் தெரியாதா?''

"விடு தங்கராஜ். அவனுக்கு எம் மேலே கோவம்... இல்லே நந்து?'' பாண்டியன் அதே மாறாத புன்னகையை வீசிவிட்டுத் தொடர்ந்தான். "நீ காலைல கேட்டேன்னு அம்மாகிட்டே சொன்னேன். உன் டிராயர் சட்டை எல்லாம் அம்மா கொடுத்து விட்டிருக்கு.... இந்தா...''

"என் கை ஈரமா இருக்கு. அப்படி வெச்சிடுங்க. அப்புறம் எடுத்துக்கறேன்...''

பாண்டியன் அந்த உதாசீனத்தைக் கவனிப்பதில்லை என்று தீர்மானம் செய்தவன் போல் புன்னகை புரிந்தான்.

"நந்து, உண்மையில் நான் உன் டிரெஸ்ஸை எடுத்திட்டு வரணும்கறதுக்காக வரலை... உன்னைப் பார்த்துட்டுப் போகலாம்னுதான் வந்தேன். காலைல டிப்பிங் ரூம்ல நெருப்புப் பிடிச்சுக்கிச்சு, ஒரு பையன் மாட்டிக்கிட்டான்னு யாரோ சொன்ன வுடனே ரொம்பப் பதறிப் போயிட்டேன். நேரா ஆஸ்பத்திரிக்கே ஓடினேன். அந்தப் பையன் பாவம், ரெண்டு கையும் வெந்து போயிருக்கு. ஆனா அது நந்தகுமார் இல்லேன்னு தெரிஞ்சவுடனேதான் என் மனசு கொஞ்சம் சமாதானமாச்சு...''

"என்ன கலெக்டரு, நம்மகிட்டே சொல்லவேயில்லியே... வேலைல ரொம்ப கவனமா இருந்துக்க கலெக்டரு!'' தங்கராஜின் கண்களில் நிஜமான கவலை வந்திருந்தது.

"நந்து, யோசிச்சுப் பாரு... இந்த ஆபத்தான வேலையெல்லாம் உனக்கு எதுக்கு? அழகா ஸ்கூலுக்குப் போயிட்டிருக்கலாம் இல்லே?'' பாண்டியன் குழைவாகச் சொன்னான்.

"எனக்குக் கண்டவங்க பணத்தில வாழ

:: கதையோ கட்டுரையோ எழுதும்போது வசதியான நீட்டத்தில் நிறுத்திப் படித்துப் பார்க்க வேண்டும். தனது குழந்தையைப் பார்ப்பது போல் பார்க்காமல், பிறர் பார்ப்பது போல் பார்க்க வேண்டும்.

இஷ்டமில்ல....''

''கலெக்டரு....'' தங்கராஜ் குரலில் உஷ்ணம் இருந்தது. ''எனக்குப் பிடிக்கவே யில்லை கலெக்டரு. நீ இந்த மாதிரிப் பேசறது... நீ மாற மாட்டேன்னு. அப்புறம் நான் உங்கூடப் பேசவே மாட்டேன். போ... போய் உன் டிராயர் சட்டையெல்லாம் வாங்கிக்க...''

நந்தகுமார் சற்றுத் தயங்கிவிட்டு, எதிர்த்துக் கொள்ள முடியாத இயலாமையினால் கண்களில் நீர் திரள, பாண்டியனை நெருங்கி அந்தத் துணிகளை வாங்கிக் கொண்டான்.

''நந்து, நீ எப்ப வீட்டுக்கு வரப் போறேன்னு அம்மா கேட்டுக்கிட்டு வரச் சொல்லியிருக்கு...''

நந்தகுமார் பதில் சொல்லாமல் உள்ளறைக்குப் போனான்.

''அவன் வருவான் அண்ணே....'' தங்கராஜ் மெல்லச் சொன்னான். ''இன்னும் ரெண்டு மூணு நாள்ல நான் அனுப்பி வைக்கிறேன்.''

''நான் பொறப்படறேன் தங்கராஜ்.''

பாண்டியன் எழுந்து கொண்டான். பதில் வராது என்று தெரிந்தும், ''நான் போயிட்டு வரேன் நந்து....'' என்று குரல் கொடுத்துவிட்டுக் கிளம்பினான். முகத்தில் ஏமாற்றம் தோய்ந்திருந்தது.

''போய்ட்டாரா?'' நந்தகுமார் வெளியே தலை நீட்டினான்.

''ஏன் நந்து, பாண்டியண்ணனைப் பார்த்தா அப்படி ராங்கிக்கறே?''

''எனக்கு அந்தாளைப் பாத்தாலே உடம்பெல்லாம் எரியுது.''

நந்தகுமாரின் நாக்கிலும், பார்வையிலும், மனத்திலும் படர்ந்திருக்கும் தேவையில்லாத இந்த விஷத்தை மெல்ல மெல்லத்தான் இறக்க வேண்டும் என்று தங்கராஜ் சமாதானம் செய்து கொண்டான்.

''உனக்குப் பக்கோடா புடிக்குமா, கலெக்டரு?''

''ரொம்ப ரொம்பப் பிடிக்கும்.''

''இந்தா எடுத்துக்க...''

நந்தகுமார் ஒரு பக்கோடாத் துண்டை எடுத்து வாயில் போட்டான்.

''எங்கம்மாகூட ரொம்ப நல்லாப் பண்ணு வாங்கண்ணே...'' என்றான். சொல்லிவிட்டு அம்மாவைப் பற்றி ஏன் சொன்னோம் என்பதுபோல் தலையைக் குனிந்து கொண்டான்.

''உங்கம்மா உனக்கு ஆசையாச் செஞ்சு அனுப்பினதுதான் கலெக்டரு...''

நந்தகுமார் சட்டென்று வாய் மெல்வதை நிறுத்தினான். வாசலுக்கு ஓடினான். 'த்தூ' என்று சப்தத்தோடு அதைச் சாக்கடையில் துப்பினான். திண்ணையில் உட்கார்ந்தான். பொங்கி வரும் துக்கத்தைச் சமாளிக்க முடியாமல் சத்தமின்றி அழத் தொடங்கினான்.

(தொடரும்)

## நெல்லை மாவட்டக் கலெக்டர் பேட்டி

# "கல்கியால் எங்கள் பணி சுலபமாகிறது!"

கல்கி: எங்கள் மாவட்டச் சுற்றுப்பயணத்தின்போது, திருநெல்வேலி மாவட்டத்திற்குத் 'திருநெல்வேலி — கட்டபொம்மன்' என்று பெயர் மாற்றம் செய்திருப்பது பற்றி ஒரு பரவலான அதிருப்தி ஏற்பட்டிருப்பதையே உணர்ந்தோம். இதற்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

திருநெல்வேலி — கட்டபொம்மன் மாவட்டக் கலெக்டர் பி. ஆர். பிந்து மாதவன்: கட்டபொம்மன் அனைவருக்கும் சொந்தமானவன். எதற்காகப் பிரித்துப் பார்க்க வேண்டும்? அதோடு, அரசு எடுத்த முடிவு பற்றி நான் என்ன சொல்ல முடியும்?

கல்கி: நெல்லை மாவட்டத்தின் மேற்குப் பகுதி புறக்கணிக்கப்பட்டே வருவதாகவும், அதனால் மேற்குப் பகுதியைப் பிரித்து 'வாஞ்சி மாவட்டம்' என்று ஒரு புதிய மாவட்டத்தை உருவாக்கினால்தான் தங்கள் பகுதி முன்னேற்றமடையும் என்றும், அதற்காகவே 'வாஞ்சி மாவட்ட இயக்கம்' என்றதோர் இயக்கத்தையே நடத்திக் கொண்டிருக்கிறார் பி. ராமநாதன் என்பவர்!

கலெக்டர்: மாவட்டத்தின் ஒரு குறிப்பிட்ட பகுதி மட்டும் புறக்கணிக்கப்படுவதென்பது தவறு. அப்படிப் பட்டதோர் எண்ணம் யாருக்கும் வரவேண்டியதேயில்லை.

கல்கி: கேரள எல்லையோரத்திலுள்ள செங்கோட்டை மக்கள், கேரளாவோடு இணைந்திருந்த தாங்கள், மொழிவாரி மாநிலம் ஏற்பட்டதன் விளைவாகக் கடந்த 56 இல் தமிழகத்தோடு இணைந்த பிறகு, கடுமையாகப் புறக்கணிக்கப்படுவதாகவே உணர்கிறார்கள். அதற்குத் தங்களூரிலிருந்த பல்வேறு அரசு அலுவலகங்களும் தென்காசிக்கு மாற்றப்பட்டதை உதாரணம் காட்டுகிறார்கள். அவர்களின் இந்த உணர்ச்சி மீண்டும் கேரளாவோடு இணைவது பற்றிய சிந்தனை அளவுக்குக் கட்டுமீறிப் போயிருக்கிறது……

கலெக்டர்: நெல்லை மாவட்டத்தின் மேற்குப் பகுதி மக்களுக்கு மையமான இடம் தென்காசிதான். அந்த நோக்கத்தில்தான் அலுவலகங்கள் மாற்றப்பட்டனவே தவிர, புறக்கணிக்கும் எண்ணத்தில் அல்ல.

கல்கி: இருக்கலாம். ஆனால் செங்கோட்டையிலுள்ள அரசு மருத்துவமனையில், நோயாளிகளுக்கான டாய்லெட் வசதி கூட இல்லாமலிருப்பது மிகவும் கொடுமையான விஷயமல்லவா? மேலும் இருபது படுக்கைகளுக்கான அனுமதி கேட்டும் இன்னமும் அரசு அதை அனுமதிக்கவில்லை. கடந்த 57 இல் காமராஜ் அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்ட 'வாஞ்சி மெமோரியல் வார்டு' இன்னும் கட்டப்படவில்லை!

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: அதேபோல் செங்கோட்டை மக்களின் குடிநீர் வசதிக்காகக் காமராஜ் காலத்தில் அடிக்கல் நாட்டப்பட்ட குண்டாறு டேம் இப்போது வெறும் டேங்க் போலத்தான் கட்டப்பட்டிருக்கிறது என்கிறார்கள் மக்கள்.

கலெக்டர்: தண்ணீர் வரத்துக்குத் தக்கபடிதான் கட்டப்பட்டிருக்கிறது. அதில் சந்தேகப்படுவதற்கு ஒன்றுமில்லை.

கல்கி: குற்றாலம் என்பது மிகச் சிறந்த சுற்றுலாத் தலங்களில் ஒன்று. ஆனால் அதை நேரில் பார்க்கும்போது, இயற்கையின் ஜீவனைத் தரிசிக்க முடியாத அளவுக்கு விளம்பர போர்டுகளும், கடைகளும் ஆக்கிரமித்துக் கொண்டுள்ளன. சுற்றுலாப் பயணிகள் செய்யும் அசிங்கங்களும் அருவிப் பக்கத்தில் போகவே ஒரு வெறுப்பைத்தான் உண்டு பண்ணுகின்றன.

கலெக்டர்: அருவியின் இயற்கை அழகைக் கெடுக்கும் ஆக்கிரமிப்புக்களை அகற்ற ஆவன செய்கிறேன். சீசன் சமயங்களில் சுற்றுலாப் பயணிகள் செய்யும் அசிங்கங்களை முடிந்தவரை நகரிய ஆட்களை நியமித்துத் தடுக்கவே செய்கிறோம். ஆயினும் மக்க

ளுக்கே அந்த உணர்வு வராத வரை நாம் என்ன செய்ய முடியும்?

கல்கி: மிகச் சிறந்த சிற்பக் கலைகளை உள்ளடக்கிக் கொண்டுள்ள கிருஷ்ணாபுரம் கோயிலும் சரிவரப் பராமரிக்கப்படாமலிருப்பது துரதிர்ஷ்டமே!

கலெக்டர்: திருப்பணி வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றனவே.

கல்கி: நடந்து கொண்டிருப்பது வாஸ்தவம்தான். ஆயினும் வீரப்பநாயக்கர் மண்டபத்தில் நுழைய முடியாதபடி, வெளவால் அசிங்கத்தின் துர்நாற்றம்!

கலெக்டர்: விரைவில் சரி செய்யப்பட்டுவிடும்.

கல்கி: 64 இல் ஏற்பட்ட சிறீமாவோ — சாஸ்திரி ஒப்பந்தத்தின் அடிப்படையில் தாயகம் திரும்பிய இலங்கைத் தமிழர்களின் மறுவாழ்வுப் பணி அத்தனை சரியானதாகச் செய்யப்படவில்லை. அதன் அடிப்படையில் நெல்லை மாவட்டத்தில் குடியமர்த்தப்பட்ட 389 குடும்பங்களில் இப்போது 241 குடும்பங்களே உள்ளன. காரணம், இலங்கையில் அவர்களெல்லாம் மலையகத் தோட்டத்தொழிலாளர்களாக இருந்தவர்கள். அப்படிப்பட்டவர்களுக்கு, இங்கே விவசாய நிலம் ஒதுக்கப்படும்போது, மான்யமும் கடனுதவியும் மட்டும் செய்தால் போதாது. விவசாயப் பயிற்சியும் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். அந்தப் பயிற்சி இல்லாததால்தான் இங்கே விவசாயம் செய்ய முடியாமல் பல்வேறு இடங்களுக்கும் கூலிகளாகக் குடிபெயர்ந்து விட்டார்கள்!

கல்கி: நீங்கள் சொல்லுகிற விஷயம் சரியானதுதான். அதோடு அவர்களுக்கு, மூன்று தவணைகளில் அரசு உதவுகிறது. பலர் முதல் தவணைக்குப் பிறகு வருவதே யில்லை. கவனிக்கிறேன்.

கல்கி: திருநெல்வேலியில் சுற்றுப்புறச் சூழல் தூய்மைக் கட்டுப்பாட்டுத் துறை அலுவலகம் ஒன்று இருக்கிறது. அது என்னதான் செய்திருக்கிறது? நாங்கள் சுற்றிப் பார்த்த வரை ஏதும் செய்ததாகத் தெரியவில்லை.

கலெக்டர்: என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்? அதனால் ஒரு மில்லை மூடப்பட்டிருக்கிறது. மதுரா கோட்ஸ் நிறுவனம் பதினொரு லட்சம் செலவில் ஒரு புதிய பிளான்ட் நிர்மாணிக்க இருப்பதே அதன் நடவடிக்கையால்தான். அது மிக நன்றாகத் தன் பணிகளைச் செய்து கொண்டுதான் இருக்கிறது.

கல்கி: திருநெல்வேலிக்குள் வரும் தாமிரபரணியின் கரையோரங்கள் அசிங்கப்பட்டுப் போயிருப்பதை நீங்களே மறுக்கமாட்டீர்கள்.

கலெக்டர்: அதற்குக் காரணம் மக்கள். அவர்களுக்கே தூய்மை பற்றிய எண்ணம் வரும்போதுதான் தாமிரபரணியும் தூய்மை அடையும்.

கல்கி: ஊர்மேலழகியான் கிராமத்திலுள்ள ராஜரத்தினம் என்பவரின் மகன் மயில்வாகனன் அருகிலுள்ள மங்களாபுரம் ருக்மணி உயர்நிலைப் பள்ளியில் ஏழாவது படித்துக் கொண்டிருந்திருக்கிறான். அவன் கடந்த 26.8.85 அன்று கடையநல்லூர் அரசு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு இறந்து போயிருக்கிறான். பள்ளி நிர்வாகிகளை விசாரித்தபோது, தற்கொலை என்கிறார்கள். பெற்றோரோ இதில் ஏதோ உண்மைகள் மறைக்கப்படுவதாகக் கருதுகிறார்கள். அதனால்தான் தங்களுக்கு இதுவரை போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் கூடக் கொடுக்கப்படவில்லை என்கிறார்கள். இதோடு, தங்கள் மகன் மட்டுமல்ல. இன்னும் சில மாணவர்கள் இப்படி இறந்திருக்கிறார்கள் என்றும் சொல்கிறார்கள். இரண்டு தரப்பிலும் விசாரித்த எங்களுக்கும் பல சந்தேகங்கள். நீங்கள்தான் விசாரித்து அந்தச் சந்தேகங்களுக்கு விடை காண வேண்டும்.

கலெக்டர்: (முழு விவரங்களையும் கேட்டுக் குறித்துக் கொள்கிறார்): விசாரிக்கிறேன்.

கல்கி: வாசுதேவநல்லூரிலுள்ள அரசு



மேல்நிலைப்பள்ளியில் விளையாட்டு மைதானம் சிலரால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ளதென்று மாணவர்களே வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்களே?

கலெக்டர்: அதன் எல்லை எது என்பதில் எழுந்துள்ள பிரச்னைதான் அது. விரைவில் சர்வே செய்து பிரச்னை தீர்க்கப்பட்டுவிடும்.

கல்கி: வாசுதேவநல்லூரிலிருந்து வெள்ளை யானைக் கோட்டை (மத்திய அமைச்சர் அருணாசலம் ஊர்) செல்லும் சாலையில் கட்டப்பட்ட பாலம் அணுகு சாலை சரியில்லாததால் வாகனங்கள் செல்ல முடியாத நிலையில் உள்ளது. தேசியம்பட்டியிலுள்ள பாலமும் இதே போல்தான் இருக்கிறது.

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: வாசுதேவநல்லூரிலிருந்து சுமார் ஆறு கி. மீ. தொலைவிலுள்ள மலையில் வசிக்கும் மலைவாசிகளான பளியர் குடும்பங்கள் மொத்தம் பதினாறு. எழுபது பேர் இருக்கின்றனர். அவர்களுக்கு இன்னும் வோட்டுரிமை வழங்கப்படவில்லை. மருத்துவ வசதி இல்லாததால் அங்குள்ள குழந்தைகள் வயிறு வீக்கம் போன்ற நோய்களால் அவதிப்படுகின்றனர்.

கலெக்டர்: ஆவன செய்கிறேன்.

கல்கி: களக்காடு மலையடிவாரத்தில் கருணாநிதியால் அடிக்கல் நாட்டப்பட்ட பச்சையாறு அணை இன்னும் கட்டப்படாததற்குக் காரணம் வனத்துறையின் அனுமதி கிடைக்காததுதான். நாங்கள் ராஜு என்ற வனச்சரக அலுவலரைச் சந்தித்த போது, 'அரசு இப்போது அணை கட்டத் திட்டமிட்டுள்ள இடத்தில் கட்டினால்தான் காடுகள் அழியும் என்று நாங்கள் அனுமதி மறுக்கிறோம். மற்றபடி அதிகச் செலவு செய்து வனப்பகுதிக்கு வெளியில் கட்டலாமே!' என்றார். அப்படிக் கட்டலாமே?

கலெக்டர்: அப்படிக் கட்டினால் செலவு மூன்று மடங்காக அதிகரிக்கும். அத்தனை செலவு செய்து கட்டப்படும் அளவுக்கு அதனால் பாசன வசதி பெற முடியாது.

கல்கி: முத்துக்கிருஷ்ணபுரத்திலுள்ள விவேகானந்தா நடுநிலைப்பள்ளியின் அங்கீகாரம் ரத்து செய்யப்பட்டதற்குக் காரணம் தமக்கும், தலைமைக் கல்வி அலுவலருக்குமுள்ள தனிப்பட்ட விரோதம்தான் என்கிறார் அதன் நிர்வாகியான ராமச்சந்திரன். அப்படி ரத்து செய்யப்பட்ட பிறகும் அப்பள்ளிக்கு 73,785 ரூபாய் அரசு மான்யம் வழங்கியிருக்கிறது. நீங்கள் விசாரித்து உண்மை கண்டறிய வேண்டும்.

கலெக்டர் (முழு விவரத்தையும் கேட்டுக் குறித்துக் கொள்கிறார்): விசாரிக்கிறேன்.

கல்கி: 66 இல் துவங்கப்பட்ட கூடன்குளம் அரசு உயர்நிலைப்பள்ளிக்குப் பன்னிரண்டு ஏக்கர் நிலத்தைப் பொது மக்கள் அன்பளிப்பாகக் கொடுத்துள்ளனர். பிறகு, ஐம்பதாயிரம் ரூபாய் செலவில் கட்டடமும் கட்டிக் கொடுத்துள்ளனர். அப்படியிருந்தும் அங்கே 9, 10 ஆகிய இரண்டு வகுப்புகள் மட்டுமே உள்ளன. 6, 7, 8, வகுப்புகள் வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: அவர்களுடைய கோரிக்கை கடந்த 15.5.85 அன்றே பள்ளிக் கல்வி இயக்குனருக்குப் பரிந்துரை செய்யப்பட்டு அனுப்பப்பட்டுள்ளது. அங்கிருந்துதான் பதில் வரவேண்டும்.

கல்கி: அதே ஊரில் அடிக்கடி கலவரங்கள் நடப்பதால் ஒரு காவல் நிலையம் வேண்டுமென்று தங்கள் தொகுதி எம். எல். ஏ. வான குமரி அனந்தனிடம் மனுக் கொடுத்தார்களாம். அவரும் 'இன்னும் ஒரே வாரத்தில் திறப்பு விழா நடத்தி விடுவோம்; இடம் பாருங்கள்' என்றாராம். அதன் பிறகு ஆளே வரவில்லையாம். நீங்களாவது ஏதாவது செய்யக்கூடாதா?

கலெக்டர்: நிலைமையைக் கண்டறிந்து ஆவன செய்கிறேன்.

கல்கி: மணிமுத்தாறு நகரியத்திலுள்ள அரசு உயர்நிலைப்பள்ளியில் பெஞ்சு வசதி, கட்டட வசதியின்றி மாணவர்கள் சிரமப்படுகிறார்கள்.

கலெக்டர்: பெஞ்சு வசதிகளை அங்குள்ள நகரியமே செய்து கொடுப்பதாக ஒப்புக் கொண்டுள்ளது. விரைவில் செய்து தரப்படும். கட்டட வசதிக்கான நிதி வசதி பற்றித்தான் உங்களுக்கே தெரிந்திருக்குமே!

கல்கி: செட்டிமேடு எனும் கிராமத்திலிருந்து சுமார் இரண்டு பர்லாங் தூரத்தில் — ஊருக்கு வெளியில் முப்பதாயிரம் வரை செலவு செய்து கிணறு, தொட்டி, பம்ப்செட் என்று ஏற்படுத்தியுள்ளார்கள். ஆனால், அவ்வளவு தூரம் நடந்து சென்று, தண்ணீர் எடுத்துவர வேண்டிய அளவுக்கு ஊருக்குள் தண்ணீர்ப் பஞ்சம் இல்லை. அதனால் அது சும்மாவே கிடக்கிறது. ஒன்று ஊருக்குள் குழாய் பதித்துத் தண்ணீர் கொண்டு வர ஏற்பாடு செய்திருக்கலாம். இல்லையெனில் சும்மாவே இருந்திருக்கலாம் என்கிறார்கள் மக்கள்.

கலெக்டர்: அப்படியா! கவனிக்கிறேன்.

கல்கி: மூலக்கரைப்பட்டியிலுள்ள மருந்தகத்தை அரசு மருத்துவமனையாக மாற்ற மூன்று ஏக்கர் 54 செண்ட் நிலத்தை ஊர் மக்கள் 58 லேயே நன்கொடையாகக் கொடுத்துள்ளார்கள். மருத்துவர்கள், நர்ஸுகளுக்கான குடியிருப்புக்களும் கட்டப்பட்டு விட்டன. இருந்தும் அவை இருபதாண்டுகளாக அப்படியே கிடக்கின்றன.

கலெக்டர்: நான்கு கி. மீ. தூரத்திலுள்ள முனைஞ்சிப்பட்டியில் ஆரம்ப சுகாதார நிலையம் இருப்பதால்தான், அது அத்தனை விரைவுபடுத்தப்படவில்லை. நிச்சயம் செய்யப்படும்.

கல்கி: உலகன் குளம் கிராமம் வழியாக எலுமிச்சை ஆற்றிலிருந்து ஒரு கால்வாய் வெட்டினால் சுமார் இருபது குக்கிராமங்கள் பயனடையும் என்கிறார்கள்.

## பரிசீலனை



எழுத்தாளரின் பெண்ணைக்
காதலித்த
இளம் பத்திரிகை ஆசிரியர்
வருங்கால மாமனுருக்குக்
கடிதம் எழுதினுர் —
'தங்களின் படைப்பு
எங்களின்
மேலான பரிசீலனையில் உள்ளது'.

— நடேஷ் ஷா

கலெக்டர்: பொதுப்பணித்துறை அத்திட்டத்தை ஆய்வு செய்து கொண்டிருக்கிறது. திட்டம் செயல்படச் சில காலம் ஆகும்.

கல்கி: சேலம் மாவட்டம் வேலூரிலுள்ள வி. சிவப்பிரகாசம் என்பவர், குற்றால நகரிய விடுதியில் இரண்டு அறைகள் முன்பதிவு செய்வதற்காகக் கடந்த 1.7.86 அன்று முந்நூறு ரூபாய்க்கு டி. டி. எடுத்து அனுப்பியிருக்கிருர். ஆனுல் 23.7.86 வரை நகரியத்திலிருந்து பதிலே இல்லை. 24 ஆம் தேதியன்று அவர் குடும்பத்தோடு குற்றாலம் சென்ற போது, 'டி. டி. வந்தது. ஆனுல் ரூம் இல்லை' என்றுர்களாம். பிறகு மதியம் இரண்டு மணி வரை காக்க வைத்து ஒரு ரூம் மட்டும் கொடுத்தார்களாம். கடைசியில் அவர் போகும் போது 'ஒரு ரூமுக்கான வாடகை போக மீதியுள்ள நூற்றைம்பது ரூபாயைக் கொடுங்கள்' என்றுராம். 'நீங்கள் செல்லுங்கள். அனுப்பி வைக்கிறேம்' என்றுர்களாம் நகரியத்தினர். பிறகு பதிலே இல்லையாம்.' சரி, அந்தப் பணத்தை அடுத்த ஆண்டுக்கான முன்பதிவுக் கட்டணமாகவாவது வைத்துக் கொள்ளுங்கள்' என்று கடிதம் எழுதியும் பதிலில்லையாம்!

கலெக்டர்: நேற்றே அந்த மீதிப் பணம் அனுப்பப்பட்டு விட்டது. (நாம், கலெக்டர் பேட்டியின் போது, இன்னின்ன காரணங்களுக்காக இந்திந்த ஆபீஸர்கள் தேவை என்று பி. ஆர். ஓ. அண்ணுமலையிடம் முன்கூட்டியே சொல்லியிருந்தோம். நாம் சொல்லச் சொல்லக் குறிப்பெடுத்துக் கொண்ட பி. ஆர். ஓ. உடனடியாகக் கலெக்டரிடம் விஷயங்களைச் சொல்லி, இப்படி நடவடிக்கை எடுக்க வைத்திருக்கிருர். இதோடு, சில தனி நபர்களுக்கான பென்ஷன் விஷயங்களையும் நமக்கு முன்பே, அவர் கலெக்டரின் கவனத்திற்குக் கொண்டு சென்று நியாயமானவற்றுக்கு ஆவன செய்து வைத்து விட்டார்.)

கல்கி: நெல்லையிலிருந்து திருவனந்தபுரம் செல்ல வேண்டுமானுல் நாகர்கோயில் வழியாகவோ அல்லது செங்கோட்டை வழியாகவோதான் செல்ல வேண்டும். ஆனுல் அம்பா சமுத்திரம், பாபநாசம் வழியாக ஒரு சாலை அமைத்தால் சுமார் நூறு கி. மீ. தூரம் மிச்சப்படும். அதனுல், டீசல், பெட்ரோல் செலவுகளும் மிச்சப்படுமென்கிருர் ஒரு வாசகர்.

கலெக்டர்: அதற்கான திட்டம் ஆய்வில் இருப்பது உண்மைதான். ஆயினும் அச்சாலை முண்டந்துறை வனவிலங்குச் சரணுலயம் வழியாகச் செல்லும் என்பதால் அதில் செல்லும் கனரக வாகனங்களால் வனவிலங்குகள் பாதிக்கப்பட வாய்ப்பிருக்கிறது. ஆய்ந்து தான் முடிவு செய்ய வேண்டும்.

கல்கி: கூடன்குளம் கிராமத்தில் கடந்த தேர்தல் நேரத்தில் குடிநீர்க் குழாய்களைப் பதித்தார்கள். தண்ணீர் வரவில்லை.. இனி அடுத்த தேர்தல் வரும் போதுதான் தண்ணீர் வருமா என்கிருர்கள்?

கலெக்டர் (சிரிக்கிருர்): அப்படியெல்லாம் இல்லை. விரைவில் செயல்படுத்தப்படும்.

கல்கி: கோவில்பட்டி அருகிலுள்ள திருவேங்கடம் என்னும் ஊரில் சுமார் 750 பேர் படிக்கும் மேல்நிலைப்பள்ளியில் குடிநீர்ப் பிரச்னை. எழுபத்தைந்தாயிரம் செலவில் பொது மக்கள் கட்டடம் கட்டிக் கொடுத்திருந்தும் போதாமல் மரத்தடிகளிலும் கோயில் மண்டபங்களிலும் வகுப்புகள் நடக்கும் பரிதாபம். அது மேல்நிலைப் பள்ளியானதற்கான அனுமதியோடு அப்பள்ளி அறிவியல் கூடத்திற்காக அரசு ரூ. 2,75,000 ஒதுக்குவதாக அறிவித்திருந்தும் இதுவரை வந்து சேரவில்லை என்கிருர்கள்.

கலெக்டர்: கோவில்பட்டி ஏரியாவில் கடுமையான குடிநீர்ப் பஞ்சம் இருப்பது உண்மைதான். அதற்காகத்தான் 92 கி. மீ. தூரத்திலிருக்கும் உள்ளாற்றிலிருந்து பதினெரு கோடி ரூபாய்ச் செலவில் குடிநீர் கொண்டு வரும் திட்டம் உள்ளது. விரைவில் செயலாக்கப்படும். மற்ற விஷயங்களும் நிதி வசதிக்கேற்பச் செய்யப்படும்.

கல்கி: விக்கிரமசிங்கபுரத்தில் உள்ள மீனுட்சிபுரம் தெருவில் குடிநீர்க் குழாய்கள் பாதியுடன் நின்று விட்டன. மீதிக்கு அங்குள்ள பாரதியார் இளைஞர் சங்கத்தினரே குழாய்கள் வாங்கித் தருவதாகச் சொல்லியும் ஏதும் கவனிக்கப்படவில்லையாமே?

கலெக்டர்: விரைவில் அவர்களுக்குத் தாமிரபரணித் தண்ணீரே கிடைக்கும்.

கல்கி: குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தில் நிறையப் பேருக்கு அறுவைச் சிகிச்சை செய்து, தாம் நல்ல பெயர் வாங்குவதற்காகக் கலெக்டர் ஒவ்வொரு பஞ்சாயத்து அதிகாரியையும் மாதத்திற்கு எட்டு பேரைக் கொண்டு வர வேண்டுமென்று கட்டாயப்

படுத்துகிறார் என்கிறார்களே?

கலெக்டர் (சிரிக்கிறார்): ஓர் இலக்கு நிர்ணயிக்கப்பட்டு அதற்காகச் செயல்படுகிறோமே தவிர, வேறொன்றுமில்லை. அதுவும் ஆண்டுக்கு முப்பத்தாறு பேர்தானே ஒழிய, மாதத்திற்கு எட்டு அல்ல. நல்ல பெயர் என்பது கலெக்டருக்கு மட்டும் கொடுக்கப்படுகிறதென்பது தவறு. அது அனைவருக்கும் சொந்தமானது.

கல்கி: அம்பாசமுத்திரம் தெற்குரத வீதியிலுள்ள ரேஷன் கடையில் ஒரே ஆள்தான் இருக்கிறார். அவரேதான் பில் போட வேண்டும்; பொருள்களையும் கொடுக்க வேண்டும். அதுவும் அங்கே கடை ஓரிடத்திலும் மண்ணெண்ணெய் ஊற்றுமிடம் வேறோர் இடத்திலும் இருப்பதால், இன்னும் தாமதமாகிறது. இன்னொருவரை நியமித்தால் என்ன?

கலெக்டர்: அரசாங்கத்தில் மாதத்திற்கு நூற்றைம்பது ரூபாய்தான் தருகிறார்கள். அதில் எப்படி இன்னொருவரை நியமிக்க முடியும்? கூடுமானவரை தாமதங்களைத் தவிர்த்துக் கொண்டுதான் பொருள்களை வழங்க ஏற்பாடு செய்திருக்கிறோம்.

கல்கி: வடக்கு குருவிகுளம் அக்ரஹாரத்திலுள்ள தமது வீட்டை சுப்பிரமணிய அய்யர் என்பவர் அரசு கோடவுனுக்கு வாடகைக்குக் கொடுத்தார். நான்காண்டுகள் வரை வாடகை வந்தது. பிறகு வரவில்லை. கோவில்பட்டியிலிருக்கும் தலைமையலுவலகம் சென்று விசாரித்த போது திருநெல்வேலி சென்று விசாரிக்கும்படியும், திருநெல்வேலி சென்ற போது, கோவில்பட்டிக்கே சென்று விசாரிக்கும்படியும் இழுத்தடித்திருக்கிறார்கள். அலுத்துப் போன அவர் வக்கீல் நோட்டீஸ் அனுப்பியும் பதிலில்லை. பிறகு அவர் காலமாகியும் விட்டார். அந்த வீடு பழுதடைந்த நிலையில் இருப்பதால், அதைத் தம்மிடம் ஒப்படைக்கும்படி அவர் மனைவி பாகீரதியம்மாள் கேட்கிறார். நீங்கள்தான் இதற்கு ஒரு முடிவு காண வேண்டும்.

கலெக்டர் (முழுவிவரங்களையும் குறித்துக் கொண்டு): விரைவில் ஆவன செய்கிறேன்.

கல்கி: வேலாயுதபுரத்தில் இருக்கும் காந்திமதி என்ற ஒரு பெண், ஒரு பெண் குழந்தையோடு கணவனால் கைவிடப்பட்டவர். சத்துணவு மையங்களில் கணவனால் கைவிடப்பட்ட பெண்களுக்கு முன்னுரிமை கொடுக்கப்பட்டாலும் தமக்குக் கிடைக்கவில்லை என்கிறார் அவர்.

கலெக்டர்: வேலை வாய்ப்பிருந்து, அவர் வசிக்கும் இடத்திலிருந்து மூன்று கி. மீ. தொலைவில் சத்துணவு மையமும் இருந்தால் அல்லது வேறு ஊருக்கு அவர் குடியேறச் சம்மதித்தால் ஆவன செய்கிறேன்.

கல்கி: ஏறந்தை எனும் ஊரிலுள்ள ஏரிக்கரை மிகவும் பலவீனமாக இருப்பதாகக் கடந்த 72 இல் புகார் கொடுத்த போது, 77 இல் சீரமைக்கும் பணி துவங்கப்பட்டிருக்கிறது. ஆயினும் அதைக் காண்ட்ராக்ட் எடுத்தவர் சரிவரச் செய்யவில்லை; கரை பழையபடி பலவீனமாகவே இருக்கிறதென்று இப்போதும் சொல்கிறார்கள்.

கலெக்டர் (குறித்துக் கொண்டு): விசாரிக்கிறேன்.

கல்கி: மத்திய அரசின் உதவியுடன் நடத்தப்படும் பாலசேவிகா பயிற்சி நிலையத்தில் பயிற்சி பெறும் பெண்களுக்கு வேலை வாய்ப்பில்லை என்கிறார்களே?

கலெக்டர்: அப்படிச் சொல்ல முடியாது. அங்கு பயிற்சி பெற்றவர்களுக்குச் சத்துணவு ஆயாக்கள் வேலையில் முன்னுரிமை தரப்படுகிறது. அந்தப் பயிற்சியின் பேரில் தையல் மெஷின் போன்றவற்றுக்குக் கடன் வழங்கப்படுகிறது.

கல்கி: வடக்கன்குளம் என்ற கிராமத்தில் கடந்த பஞ்சாயத்துத் தேர்தலின் போது இந்து — கிறிஸ்துவ மத அடிப்படையில் பிரசாரம் நடந்ததால் கடந்த ஏப்ரலில் நடந்த திருவிழாவின் போது மதச் சண்டை ஏற்பட்டு வழக்குகள் பதிவாகியுள்ளன என்றும், வழக்குகளால்மேலும்மேலும்பகையுணர்வே வளருமென்றும், அதனால் இப்போது அதிகாரிகள் தலையிட்டு அவர்களைச் சமாதானப்படுத்தி வழக்குகளை வாபஸ் பெறச் செய்து ஒரு நட்புணர்வை உருவாக்கலாம் என்றும் ஒரு வாசகர் எழுதியுள்ளார்.

கலெக்டர்: பேசிப் பார்க்கிறேன். சமாதானத்தைத்தானே அனைவரும் விரும்புகிறோம்!

கல்கி: வள்ளியூர் தேசியநெடுஞ்சாலையில் ஒரு நபர் தாம் கட்டியுள்ள கல்யாண மண்டபத்திற்கும்,மற்றகட்டடங்களுக்கும்அங்குள்ள ஓடையின் அகலத்தைக் குறுக்கி — ஆக்கிரமித்துச் சாலை போட்டிருப்பதால் மழைக்காலத்தில் வெள்ளம் வரும்போது ஊருக்குள் புகும் அபாயம் இருக்கிறதென்று சொல்கிறார்கள்.

கலெக்டர்: அதுபோன்ற சில ஆக்கிரமிப்புகளை அகற்றுவதற்கு புல்டோசர் போன்ற இயந்திரங்களைப் பயன்படுத்த வேண்டும். இதனால் செலவு அதிகமாகிறது. நிதி வசதி கருதி ஒத்திப் போட்டிருக்கிறோம். கண்டிப்பாக ஆக்கிரமிப்புகளை ஒருபோதும் அனுமதிக்க மாட்டோம்.

கல்கி: பிள்ளைக்குளம் எனும் ஊரில் மழைக்காலத்தில் பயன்படுத்தப் பாதை வசதி இல்லை. அதனால் மணிமுத்தாற்றின் குறுக்கே ஒரு பாலம் கேட்கிறார்கள்.

கலெக்டர்: அத்திட்டம் ஆய்வில் இருக்கிறது.

கல்கி: திசையன்விளையில் பதினைந்தாயிரத்துக்குமேல் மக்கள் தொகை இருந்தும் அங்குள்ள ஆரம்ப சுகாதார நிலையத்தில் இரண்டு படுக்கைகளே உள்ளன. விரிவுபடுத்த வேண்டும் என்கிறார்கள்.



"பக்கத்து வீட்டு நாய் சீசர் காணாமல் போனா, நீங்க ஏன் கவலைப்படறீங்க?"

"அது எங்க வீட்டு ரோஸியைக் கூட்டிக்கிட்டு ஓடிப் போச்சே!"

— நடேஷ் ஷா

கலெக்டர்: நியாயமான கோரிக்கைதான் நிச்சயம் செய்யவுள்ளோம்.

கல்கி: பாளையங்கோட்டையிலுள்ள ஒரே பெண்கள் கலைக் கல்லூரியிலும் நான்காண்டுகளுக்கு முன்பு ஆரம்பிக்கப்பட்ட இளங்கலை வணிகவியல் துறையில் இரண்டே உதவிப் பேராசிரியர்கள்தான் இருக்கிறார்கள். சிரமமாக இருக்கிறது என்கிறார்கள் மாணவிகள்.

கலெக்டர்: உண்மைதான். யாரும் வந்து சேர மாட்டேனென்கிறார்கள் போல் இருக்கிறது. முடிந்ததைச் செய்கிறேன்.

கல்கி: பாளை மருத்துவமனையிலிருந்து வரும் கழிவுநீர் ரயில் நகர் ஓரத்தில் தேக்கப்படுவதால் அப்பகுதி மக்களுக்குச் சுகாதாரக் குறைவு ஏற்படுகிறது.

கலெக்டர்: நாங்களும் பார்த்தோம். இப்போதைக்கு — மாற்று ஏற்பாடு செய்யப்படும் வரை அந்தத் தண்ணீரைச் சுத்தப்படுத்தினால் குறைந்தபட்சம் மூன்று மாதங்களுக்காவது பிரச்னையில்லாமல் இருக்கும். செய்யப் போகிறோம்.

கல்கி: பாளை அருகிலுள்ள E. B. காலனி மற்றும் தியாகராச நகர்ப் பகுதி மக்களுக்குச் சுடுகாட்டு வசதி கூட இல்லை. அதற்குப் பதின்மூன்று கி. மீ. செல்ல வேண்டும் என்கிறார்கள். இது கொடுமையில்லையா?

கலெக்டர்: அது மட்டுமல்ல; அங்கு குடிநீர்ப் பிரச்னையும் பூதாகாரமானதுதான். ஆறு லட்சம் செலவில்,வரும் மே மாதத்தில் அவர்களுக்குத் தாமிரபரணித் தண்ணீர் கொடுக்க உள்ளோம். சுடுகாட்டுக்கான இடம் ஒதுக்குவதற்கான முயற்சிகளும் செய்யப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன.

கல்கி: 113 லட்ச ரூபாய்ச் செலவில் திருநெல்வேலியில் ஆரம்பிக்கப்பட்ட பாதாளச் சாக்கடைத் திட்டம் பாதியில் நிற்பதேன்?

கலெக்டர்: விரைவில் ஆரம்பிக்க உள்ளோம்.

கல்கி: தச்சநல்லூர் அருகிலுள்ள ரயில்வே கேட் மதுரை செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் உள்ளதால் போக்குவரத்து மிகவும் பாதிக்கப்படுகிறது. அதனால் ஒரு மேம்பாலம் அவசியம் என்கிறார்கள்.

கலெக்டர்: உண்மைதான். ஆனால் மேம்பாலத்துக்கு அங்கே போதிய இடமில்லை. அதற்குப் பதில் சுரங்கப்பாதை அமைப்பதற்கான திட்டம் அரசின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டுள்ளது.

கல்கி: பாளையில் உள்ள விளையாட்டு விடுதியில் தங்கிப் படிக்கும் மாணவர்களுக்கு மாதம் இருநூற்றைம்பது ரூபாய்தான் கொடுக்கப்படுகிறது. ஆனால் ஆந்திர மாநிலம் போன்றவற்றிலோ எழுநூற்றைம்பது ரூபாய் கொடுக்கப்படுகிறது. அதனால் இரண்டு பேருக்கும் இடையில் போஷாக்கு உணவு நிறைய வித்தியாசப்படும். இந்நிலையில் நமது மாணவன் எப்படி ஆந்திர மாணவனை வெற்றி பெற முடியும்?

கலெக்டர்: இந்த வித்தியாசம் எனக்குத் தெரியாது. ஆயினும் தமிழ்நாடுதான் மத்திய அரசு விளையாட்டுக்காக ஒதுக்கும் உதவிப் பணத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்கிறது.

கல்கி: அது உண்மையல்ல. மத்திய அரசு ஆண்டொன்றுக்கு இருபது கோடி ரூபாய் ஒதுக்குகிறது. ஆனால் அதை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்பவை பஞ்சாப், கேரளம், உத்திரப்பிரதேசம், ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்கள்தான். தமிழ்நாடு அரசு சரிவரப் பயன்படுத்திக் கொள்வதேயில்லை என்று மத்திய விளையாட்டுத் துறை அமைச்சர் மார்க்கரெட் ஆல்வாவே குறைபட்டிருக்கிறாரே? அது பொய்யாக இருக்கும் பட்சத்தில் 86 ஆம் ஆண்டுக்கான உதவித் தொகை இன்னமும் வராமலிருக்க வேண்டிய அவசியமில்லையே?

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: நெல்லையில் குர்னிகால் சிங் சப்-கலெக்டராக இருந்தபோது அகற்றப்பட்ட ஆக்கிரமிப்புகள் மறுபடியும் தலைதூக்க ஆரம்பித்துள்ளதாகச் சொல்லப்படுகிறதே?

கலெக்டர்: தலைதூக்கும் போதெல்லாம் அகற்றிக் கொண்டுதான் உள்ளோம். பாரபட்சம் பார்ப்பதேயில்லை.

கல்கி: அப்படியானால் நெல்லை மாவட்ட மக்கள் சார்பில் மிகவும் நன்றி சொல்லுகிறோம்.

கலெக்டர்: மாவட்டம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்து, மக்களின் குறைகளையும் தேவைகளையும் கண்டறிந்து, என்னிடமும் மற்றவர்களிடமும் முறையிட்டதன் மூலம் எங்கள் பணியைச் சுலபமாக்கியிருக்கும் உங்களுக்கு நாங்கள்தான் நன்றி சொல்ல வேண்டும். இவை மட்டுமல்ல; எதிர்காலத்திலும் எங்கள் மாவட்டத்திலிருந்து ஏதாவது குறைகளைத் தாங்கிய கடிதம் உங்களுக்கு வந்தால், உடனே அனுப்பி வையுங்கள். ஆவன செய்கிறோம். நன்றி, வணக்கம்!




# 6

மாற விரும்பாதவர்கள் 'எல்லாம் விதி, எல்லாம் தலையெழுத்து. அதன்படிதான் நடக்கும்' என்று விதியின் மீது பாரத்தைப் போட்டுவிட்டுப் பொறுப்பைத் தட்டிக் கழிக்கிறார்கள். பொறுப்பைத் தட்டிக் கழிப்பதில் சுகம் இருக்கிறது!

மற்றும் சிலர், "எங்க அப்பா இப்படி, எங்க தாத்தா இப்படி. இதெல்லாம் பாரம்பரிய விஷயம். என்றால் எப்படி வேறுவிதமாக நடந்து கொள்ள முடியும்?" என்று பாரம்பரியத்தின் மீது ஜீன்கள் — குரோமோசோம்கள் மீது பழியைப் போடுகின்றனர். நாம், இங்கே விதிக்குப் பதில், வேறு ஒரு காரணத்தைக் கண்டுபிடித்துவிட்டோம்! சந்தோஷப்படலாம்!

மற்றும் சிலர் மனவியல் அறிஞர் பிராய்டைத் துணைக்கு அழைப்பார்கள். ஏனெனில் இளமையில் — ஆறு வயதுவரை — நாம் எப்படிப் பழக்கப்படுத்தி வளர்க்கப்பட்டோம் — பயமுறுத்தப்பட்டோம் — என்பதைப் பொறுத்துத்தான் நமது அணுகுமுறையும் வாழ்க்கை முறையும் அமைகிறது என்று பிராய்டு கூறி இருக்கிறார்.

சமுதாயவாதிகளையும், வழக்கறிஞர்களையும் கேட்கும்போது, "வளர்ந்த சூழ்நிலையில் அவன் பாதிக்கப்பட்டான்! திருடனானான்! கொலைகாரனானான்! சமுதாய விரோதி ஆனான்! அந்தச் சமுதாயத்தைக் குற்றக் கூண்டில் ஏற்றுங்கள்!" என்று உணர்ச்சிப் பிரசங்கம் செய்வதுண்டு.

விதி, சூழ்நிலை, பாரம்பரியம், வளர்க்கப்பட்ட விதம் என்பனவற்றின் முத்திரைகள் நம் வாழ்வில் விழத்தான் விழுகின்றன.

வாழ்வு ஒரு சீட்டு விளையாட்டுப் போல. நமது சீட்டுக்களை நாம் தேர்ந்தெடுக்க முடிவதில்லை. அதேபோல், நமது அப்பா, அம்மாவை, நாம் பிறந்த ஊரை, நாம் வளர்க்கப்பட்ட விதத்தை, எதிர்பாராது ஏற்படும் சம்பவங்களை நம்மால் தேர்ந்தெடுக்க முடிவதில்லை; கட்டுப்படுத்த முடிவதில்லை.. நம் கையில் சில சீட்டுக்கள் வந்திருக்கின்றன. இவைதானே வந்திருக்கின்றன என்று நொந்து கொள்ளாமல் — அலுத்துக் கொள்ளாமல் — இருப்பதை வைத்துச் சிறப்பாக விளையாடும் திறமைதான் வாழ்க்கை.

இங்கிலாந்தின் ராஜ குடும்பத்தில் பிறந்திருந்தால் நீங்கள் ஒருவேளை ராணியை மணந்திருக்கக் கூடும். நேருவின் பாரம்பரியத்தில் பிறந்திருந்தால் ஒருவேளை உங்களுக்குப் பிரதமராகும் வாய்ப்பு அதிகம் இருந்திருக்கலாம். இந்த வாய்ப்புக்கள் ஏதும் இன்றி, எங்கோ பிறந்த, லால்பகதூர் சாஸ்திரியையும், காமராஜரையும் நடிகர் ரேகனையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். குறைபடுவதில் அர்த்தமில்லை. இருப்பதை வைத்துக் கொண்டு நம்மை வளர்த்துக் கொள்வதில், உயர்த்திக் கொள்வதில், நம்மை உயர் பதவிக்குத் தகுதி உள்ளவனாக மாற்றிக் கொள்வதில்தான் திறமை இருக்கிறது.

சைபீரியாவில் கடுங்குளிரில் சிறை வைக்கப்பட்டிருந்தனர் அந்தக் கைதிகள். தினந்தோறும் காலையில் எழுந்து குளிரில் பல மைல் நடந்து போக வேண்டும், கல் உடைக்க. போதுமான உணவு தரப்படுவதில்லை. ஆகவே, அடிக்கடி தளர்ந்து போனார்கள். சிறை அதிகாரிகளின் கெடுபிடியும் மிருகத்தனமும் வேறு! ஆனால், அந்தக் கைதிகள் இந்த நிலையிலும் பல சுதந்திரங்களைத் தாங்களே கண்டுபிடித்தார்கள். கைக்கொண்டார்கள்.

நடக்கின்ற பாதைகளில் கிடந்த பல நிறக் கற்களை எடுத்து, அவற்றை மாணிக்கக் கற்களாக எண்ணி மகிழ்ந்தார்கள். நடக்கும் வழியின் சிரமத்தைக் குறைக்கப் பாடினார்கள். வேலையின் கடுமையைக் குறைக்க, 'யார், வேலை அதிகம் செய்கிறார்கள்' என்ற போட்டியை ஏற்படுத்திக் கொண்டார்கள். திரும்பி வரும்போது நடக்க முடியாமல் தள்ளாடுபவர்களை, மற்றவர்கள், தோளில் சுமந்து உதவினார்கள். கைதிகள்தான் அவர்கள்! ஆனால் மனித மனம் சிறைப்படவில்லை அங்கே!

மன மாற்றங்கள்தான் — நமது அணுகுமுறைதான் — நமது மன மகிழ்வுக்கும் நிறைவுக்கும் காரணமாகிறது. நாம் செய்யும் புரச்

# மாறுவதற்குத் துணிவு உண்டா நம்மிடம்?

செயல்கள் — காரியங்கள்தான் நமது அக மாற்றங்களுக்கு வித்தாகிறது.

**வா**ழ்வைப் பற்றி ஆதியோடந்தமாக ஆராய்ந்த அறிஞர்கள் முக்கியமான இரண்டு விஷயங்களை நம் கவனத்திற்கு வைக்கிறார்கள். அவை யாவை?

வாழ்வில் எது முக்கியம் என்ற தெளிவு;
அதை அடைய எது நம்மைத் தடுக்கிறது என்ற அறிவு

இன்றிருக்கிறபடியே இருந்து வாழ்நாளைக் கழித்துவிடுவேன் என்று எண்ணி இருப்பீர்களானால் நீங்கள் இந்தக் கட்டுரைத் தொடரைப் படிக்கத் துவங்கி இருக்கமாட்டீர்கள். ஒரு ஜீவனின் அடிப்படை இயல்புகளை ஆராய்ந்த அறிஞர்கள், "ஜீவனுக்கு வாழும் துடிப்பு, வளரும் ஆசை, தெரிந்து கொள்ளும் ஆர்வம், தன் எல்லாத் திறமைகளையும் உபயோகித்து வாழும் முயற்சி ஆகியவை அடிப்படையிலேயே இருக்கிறது" என்று எழுதுகிறார்கள்.

ஆகவே, அந்த ஜீவ இயல்பை எதிர்த்துப் போராடுவதைப் போன்ற முட்டாள்தனம் வேறேதுமில்லை. அதேபோல் ஜீவ இயல்பை உணர்ந்து, அத்துடன் ஒத்துழைத்து, வாழ்வாங்கு வாழும் புத்திசாலித்தனம்போல் வேறேதுமில்லை.

மாற்றங்களை வரவேற்பதிலும், மாற்றங்களுக்கு நம்மைத் தயார் செய்து கொள்வதிலும்தான் பரிணாம வளர்ச்சி இருக்கிறது. எது தகுதி உள்ளதோ, எது புதிய சூழ்நிலைகளைச் சமாளிக்கிறதோ — அதுதான் வாழ்கிறது என்பது டார்வினின் பரிணாம வளர்ச்சித் தத்துவம். 'டைனசோர்' என்ற மிருகம் மிகப் பெரிதாக இருந்தபோதிலும் புதிய சூழ்நிலைகளைச் சமாளிக்கும் திறமை இன்மையால், காலச் சுவடுகளால் அழிக்கப்பட்டுவிட்டது. இதற்கு மறுபுறமாகக் கற்கால மனிதனுடன் இன்று வாழும் மனிதனை ஒப்பிடும்போது, இன்று வாழும் மனிதன் எப்படி ஜீவத் துடிப்புடன் வேகமாக வளர்ந்து முன்னேறி இருக்கிறான் என்பதை நாம் உணரலாம்.

**நா**ம் புதிய மனிதனாக, வேறு வகைக் குணங்களுடன் வாழ வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்? நாம் விரும்பும் மாறுதல்கள் நமது உள்மனத்திலிருந்து புறப்படவேண்டும். அந்தப் புது குணங்கள் நமது ஆத்மாவின் அந்தரங்க அபிலாஷைகளாக மாற வேண்டும்.

நம்மிடமெல்லாம் எப்போதாவது ஒரு முறை மிகுந்த பரோபகாரக் குணம் தோன்றுகிறது. என்றோ ஒருநாள் மன்னிக்கும் மனோபாவம் வெளிப்படுகிறது. எப்போதாவது பாரபட்சமற்று விஷயங்களைப் பரிசீலிக்கிறோம். அதாவது நாம் எல்லோரும் எப்போதாவது ஒருமுறை காந்தி ஆகிறோம். மகாத்மா காந்தியோ திரும்பத் திரும்ப, தினந்தோறும் காந்தி ஆகிக் கொண்டிருந்தார். அப்போதுதான் நிரந்தர மாறுதல் ஏற்படுகிறது. அப்படி



நிரந்தர மாறுதல் நம்மிடம் ஏற்படும்வரை நாம் விடாமுயற்சியுடன் முயன்று கொண்டே இருக்க வேண்டும்.

**ப**லருக்கு ஏற்பட்ட அனுபவங்கள் ஆழப் பதிந்து அவர்களது வாழ்வை 180 டிகிரி அளவில் தலைகீழாக மாற்றி இருக்கின்றன. அருணகிரிநாதருக்கு ஏற்பட்ட அனுபவத்தையும் அதனால் விளைந்த மகத்தான மாற்றத்தையும் எண்ணிப் பாருங்கள். வயோதிகமும், பிணியும், சாவும் சித்தார்த்தன் வாழ்வில் விளைவித்த சிந்தனை மாற்றங்களையும் துறவையும் எண்ணிப் பாருங்கள். கலிங்கப் போரும், யுத்த களமும், போர் வீரர்களின் சாவுக் குரலும் அசோகரை எப்படி மாற்றியது என்று எண்ணிப் பாருங்கள். பைபிளில் எலிஜா மகம்மது என்று ஒரு மனிதர் பெரிய திருடனாக வாழ்வைத் துவங்குகிறார். சமுதாய அநீதிகளை எதிர்ப்பதற்காகவே இப்படி ஒரு ராபின் ஹூடாக இவர் மாறுகிறார். ரோம் நாட்டில் செல்வந்தர் வீட்டில் பிறந்த அசிசி என்ற இளைஞர் ஏழைத் துறவியாக ஒரு ஞானியாக வாழ்வை முடிக்கிறார்.

நாமும் மாறத் தயாராவோம். இன்று நம்மிடமுள்ள மோசமான இயல்புகளை உதிர்த்து, இன்றுள்ளதைவிட ஒருபடி மேலான நிலைக்கு உயரும் வகையில் மாறுவோம். அந்த மாற்றம் பொருளாதார ரீதியில்தான் இருக்க வேண்டும் என்பது இல்லை. மனத்தளவில் நம்மை உயர்த்தினாலும் வரவேற்க வேண்டியதே. மனம் உயர்ந்தால் தன்னால் வாழ்க்கையும் வளமுறும்.

— டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

# தராசுக்குப் பதில் எம்.ஜி.ஆர். பதிலளித்தால்?

* பதிலளித்தால்....?





* மிஸ்டர்.....

* ..... கினின் ..



*** வாசுதேவன், கல்கத்தா—29**

**? சென்னை 'டெஸ்ட்' எப்படி?**

! டிராவில்தான் முடியப்போகிறது என்பது, முந்தைய நாளே தெரிந்துவிட்டதால், கடைசி நாள் ஆட்டம் 'சப்'பென்று ஆகிவிட்டது. ஆனாலும் டெஸ்ட்டை ஒளி பரப்பிய நமது சென்னை டி.வி. நிலையத்தாரின் காமிரா, புத்திசாலித்தனமாகவும் கவிதையாகவும் படம் பிடித்ததை வெகுவாக ரசித்தேன்.

*** ஆர்காடு எழிலன், திருச்சி—2**

**? தற்காலத்துச் சிறுகதைகளைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

! நல்ல ஆரோக்கியமான சிந்தனைகளைக் கொண்ட புதுப்புது எழுத்தாளர்கள் தென்படுகிறார்கள். நல்ல அறிகுறி. ஆனால் பத்து சிறுகதைகள் எழுதிய உடனே தொடர்கதை மோகம் பலரை ஆட்கொள்வதுதான் வருத்தமளிக்கிறது. நாவல் எழுதுவதைவிட, சிறுகதை எழுதுவது சிரமமானது. சிறுகதை இலக்கியத்தில் மட்டுமே கொடிகட்டிப் பறப்போம் என்று இவர்களுக்குத் தோன்றாததற்குக் காரணம் புகழ் மோகம்.

***சி. மணி, புத்தனாம்பட்டி ***

**? ஊழலை அறவே ஒழிப்பதற்குக் கடுமையான சட்டம் ஒன்றை மத்திய அரசு கொண்டுவரத் தீர்மானித்திருக்கிறதே. அப்போதாவது ஊழல் முழுவதுமாக ஒழிந்துவிடுமா?**

! கடுமையான சட்டங்களால் லஞ்ச ஊழல் ஒழியாது. 'ரேட்' அதிகமாகும் அவ்வளவுதான். ஏனென்றால் 'ரிஸ்க்' அதிகமாகிறதல்லவா? லஞ்ச ஊழலை ஒழிக்க ஒரே வழி லஞ்சம் அளித்தால்தான் காரியம் நடக்கும் என்பதற்கு இடமில்லாமல் செய்வதுதான். அதாவது அரசாங்கத்திடம் உள்ள அதிகாரங்களை அரசாங்கக் கட்டுப்பாடுகளை (கண்ட்ரோல்களை) மிகக் குறைந்தபட்சமாக்கி மக்களிடம் சுதந்திரத்தை அதிகபட்சமாக வழங்குவதுதான். இதைச் செய்ய முடியாமல் தடுப்பது அதிகாரத்தில் உள்ளோரின் சுயநலம்.

* .... யார்?



* நல்ல காரியம்



*** இ.ச. கோபுராஜ், நெய்வேலி**

**? தோல்விகளே சரமாரியாகத் தோளில் வந்து ஏறிக் கொண்கின்றன. அவற்றைத் தோப்புக்கரணம் போட வைக்க என்ன செய்ய வேண்டும்?**

! 'இதெல்லாம் என் விதி; துரதிர்ஷ்டம் என்று சோர்ந்து போய் உட்காராதீர்கள். முதலில் தன்னம்பிக்கை கொள்ளுங்கள். வெற்றி மாளிகையின் திறவுகோல் என்பது வேறொன்றுமில்லை; தன்னம்பிக்கையேதான். அதோடு விடாமுயற்சியும் தேவைதான். இவை மட்டும் போதாது. 'நமக்கு ஏன் இந்தத் தோல்வி ஏற்பட்டது, நாம் என்ன தவறு செய்தோம்?' என்று சுயவிமர்சனம் செய்து கொள்கிற மனப்பக்குவமும் அவசியம். தெரியாததைத் தெரிந்து கொள்ளும் ஆர்வம்; அனுபவம் மிக்கவர்களிடம் ஆலோசனை கேட்கத் தயங்காத மனப்பக்குவம்; யோசனைகளைப் பெற்ற பிறகு அவற்றில் எதை ஏற்பது எதை விடுவது என்று தானே சிந்தித்து முடிவெடுக்கும் திட சித்தம் இவையெல்லாமும் வெற்றிப் பாதையில் முன்னேற இன்றியமையாத குணங்கள்.

* தாண்டவமூர்த்தி, பள்ளவெளி.

? பெண்ணே!
நான் தோற்றுப் போகிறேன்,
உன்னை வர்ணிக்க
முயன்று.... முயன்று...
— எப்படி இருக்கிறது என் கவிதை?

! பெண்ணே,
வாயால் பேசினால்
பிறருக்கும் கேட்குமென்று
இமைகளை உதடுகளாக்கி
விழிகளால் பேசுகிறாய்?
— என் கவிதை எப்படி? எதையும் நேரடியாகச் சொல்வது கவிதையாகாது. விஷயங்களை இடம் மாற்றிப் புரட்டிப் போட வேண்டும்; அப்படிச் செய்யும்போது, ஒரு புதுமையான சிந்தனை வெளிப்பட வேண்டும்; அதிலே அழகுணர்ச்சியோ அல்லது வேறு உணர்ச்சியோ இருக்க வேண்டும்; அதைப் படித்துப் பார்க்கும்போது ஒலிநயமும் இதயத்தைஈர்க்க வேண்டும். இவை என் கவிதையில் இருக்கிறதா என்பதை நீங்கள் எடை போடுங்கள்.

* ஆர்.கே. அருள்செல்வன்,
விக்கிரபாண்டியம்

? ஆந்திராவில் லாட்டரிச் சீட்டு ஒழிப்பு நடவடிக்கை பற்றி....?

! என்.டி. ஆரின் சில விஷயங்கள் கோமாளித்தனமாக இருந்தாலும் இது போன்ற சில விஷயங்கள் பாராட்டுக்குரியவைதான். சந்தேகமென்ன?

* எஸ்.எச். ஷேக்தாவுத், திருச்சி — 8

? தராசு பதில்களுக்குப் பதிலாக எம்.ஜி.ஆர். பதிலளித்தால் எப்படியிருக்கும்?

! அதில் ஒன்றும் சுவாரஸ்யமிருக்காது. தராசு கேள்விகளுக்கு எம்.ஜி. ஆர். பதிலளித்தால்தான் சுவாரஸ்யமாக இருக்கும்.

* மு. சிவஞான முருகன், ஸ்ரீவைகுண்டம்

? ராஜீவ் காந்தி, வி.பி. சிங், ஹெக்டே ஆகிய மூவர் பெயர்களும் 'திருவாளர் சுத்தம்' (Mr. Clean) பட்டத்திற்குப் பரிசீலிக்கப் படுகிறது; அதில் நீங்கள்தான் நடுவர் என்றால் அப்பட்டத்தை யாருக்குக் கொடுப்பீர்கள்?

! சில சமயங்களில் ராஜீவ் காந்தியின் சொற்கள் முன்னுக்குப் பின் முரணாக இருப்பதால், முதல் சுற்றிலேயே அவரை நிராகரித்து விடுவேன். எஞ்சியிருப்பது வி.பி. சிங்கும் ஹெக்டேவும்தான். பண முதலைகளின் பற்களைப் பிடுங்குவதற்காக வி.பி. சிங் எடுத்த கடந்த கால நடவடிக்கைகளையும், இந்த தேசத்தில் ஆரோக்கியமான அரசியல் சூழ்நிலை உருவாக வேண்டும் என்பதில் ஹெக்டே காட்டுகிற அக்கறையையும் சீர் தூக்கிப் பார்க்கும்போது, எது விஞ்சி நிற்கிறது? சொல்லா அன்றிச் செயலா? சொற்களைவிடச் செயல்களே மேலானவை எனினும், சொற்கள் — எண்ணங்கள் இன்றிச் செயல்கள் மட்டும் எங்கிருந்து வர முடியும்? இந்தக் குழப்பத்திற்கு விடை காண ஹெக்டேவிடமே செல்வேன். அவர் பெருந்தன்மையோடு விட்டுக் கொடுத்து, வி.பி. சிங்கையே சிபாரிசு செய்வார். இந்நிலையில், தமக்குக் கீழ் பணியாற்றும் வி.பி. சிங்குக்கு இப்படியொரு பட்டமா என்ற கோபத்தில் பிரதமர் வி.பி. சிங்கை வீட்டுக்கு அனுப்பிவிடக் கூடும். அப்போது பட்டமே பாதகமாகிவிடுமே!

* ஆ.எம்.எஸ். திருமலைசாமி, கோவை

? சமீபத்திய கல்கி இதழ் ஒன்றில், 'எம்.ஜி. ஆரின் நண்பரென்றால் இத்தனை சலுகைகளா?' என்ற கட்டுரையில் டாக்டர் பழனி ஜி. பெரியசாமி பற்றி எழுதியிருந்தீர்கள். பிறகு இவ்விஷயத்தில் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தியையும் இணைத்துச் சில தினசரிகள் எழுதியுள்ளனவே?

! அது தவறான செய்தி. இது தொடர்பாக டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தியையே கேட்டேன். தமது பெயர் சம்பந்தமில்லாமல் இழுக்கப்பட்டுள்ளதாக அவர் மிகவும் வருந்தினார். அவர் தட்டிக் கேட்டபோது, 'நாங்கள் உதயமூர்த்தி என்றுதானே போட்டோம்? டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி என்று போடவில்லையே' என்று அந்த நாளிதழில் — பொறுப்பில் உள்ளவர்கள் பதில் சொன்னார்களாம்!

* அ. ஹரிகணேஷ், மதுரை — 16

? அளவுக்குமீறிப் பணம்சேர்த்துவிட்டால், நடிகர், நடிகையர் அரசியலில் சேருவது ஏன்?

! பணம் சேர்ப்பது மட்டும் புத்திசாலித்தனமாகாது. அதைக் காப்பாற்றிக் கொள்வதற்கும் ஒரு புத்திசாலித்தனம் வேண்டுமே, அதற்குத்தான். இரண்டாவது காரணம், சினிமா பாபுலாரிட்டி அஸ்தமனமாகும் போது, மனம் சோர்ந்துவிடாதிருக்க, அரசியல் பாபுலாரிடி கைகொடுக்கும்.

*
ரூ 10 பரிசு பெறுபவர்:
சி. மணி,
மெயின்ரோடு,
புத்தனாம்பட்டி அஞ்சல்,
திருச்சி மாவட்டம் 621 007.

# பிறந்த மண்ணை மறவாதவர்!



பொறி இயல் கல்லூரியில் ஆய்வகம்; வலப்புறம் எஸ். ஏ. ராஜா.

அயல்நாடுகளுக்குச் சென்று பணியாற்றி, தொழில் அல்லது வியாபாரத்தில் ஈடுபட்டு, ஏராளமாகப் பணம் சம்பாதிப்பவர்கள் பலர். அவர்களில் எத்தனை பேர் தாம் பிறந்த மண்ணை மறவாமல் திரும்பி வந்து, ஈட்டிய செல்வத்தை அப்பகுதியின் அபிவிருத்திக்கு முதலீடு செய்கிறார்கள்? அத்தகைய ஒரு சில அபூர்வப் பிறவிகளுள் ஒருவர் எஸ். ஏ. ராஜா.

இவர் பிறந்து வளர்ந்தது நெல்லை மாவட்டம் வடக்கன்குளத்தில். பன்னிரண்டு மொழிகளைப் பயின்றதுடன் பட்டப் படிப்பையும் முடித்த ராஜா, வசதியான குடும்பத்தில் பிறந்ததால் ராஜா போல வாழ்ந்து கொண்டிருக்கலாம். ஆனால் சேவகனாக தேச சேவை செய்யும் ஆர்வத்தில் முப்படைகளிலும் பணியாற்றினார். விமானப் பொறி இயல் கல்லூரியில் படித்துத் தேர்ந்தார். அங்கேயே தொழில் நுட்பப் பிரிவில் இஞ்சினியராகவும் ஆசிரியராகவும் பணியாற்றினார். ராணுவத்திலிருந்து வெளியேறிய பிறகு சவூதி அரேபியா சென்று ஒரு கம்பெனியில் உதவி நிர்வாக இயக்குனராக விளங்கினார். பின்னர் தனியே தொழில் தொடங்கி 104 நாடுகள் அங்கம் வகித்த தொழிலதிபர்கள் கவுன்ஸிலில் ஒரே இந்தியராகும் அளவுக்கு உயர்ந்தார்.

அப்புறம் தாயகம் திரும்பி ஒரு நூற்பாலை தொடங்கி, வடக்கன்குளம் சுற்று வட்டாரத்தில் பலருக்கு வேலை வாய்ப்பளித்தார். அத்துடன் நில்லாது ஒரு தொழில்நுட்பக் கல்லூரி நிறுவினார். மூன்றே மாதங்களில், அதன் வளர்ச்சி கண்டு பாராட்டிய தொழில் நுட்பக் கல்லூரி இயக்குனர், ஒரு பொறி இயல் கல்லூரி தொடங்கவும் ராஜாவுக்கு அனுமதி அளித்தார்.

ராதாபுரம் வட்டம் காங்கிரஸ் கமிட்டித் தலைவரான எஸ். ஏ. ராஜாவின் இரு கல்லூரிகளும் இருநூறு ஏக்கர் நிலப்பரப்பில் ஒரே வளாகத்தில் இருந்தாலும் தனித்தனியே உறுதியான கட்டடங்களைப் பெற்றுள்ளன. இரு திறந்தவெளி கலை அரங்கங்கள் வேறு. விடுதி வசதி, ஆசிரியர் — மாணவர் இரு தரப்பினருக்கும் உண்டு. தாளாளர் எஸ். ஏ. ராஜாவே தொழில்நுட்பக் கல்லூரி முதல்வராகவும், பேராசிரியர் அலெக்ஸாண்டர் பொறி இயல் கல்லூரி முதல்வராகவும் சிறப்பாக இயங்குகின்றனர்.

எஸ். ஏ. ராஜா ராணுவத்தில் பணிபுரிந்தவராகையால் ஒழுக்கத்துக்கு முதலிடம் தருகிறார். மாணவர்களுக்கு மட்டுமின்றி, ஆசிரியர்களுக்கும் சீருடை விதிமுறைகள் உண்டு. ஆய்வகங்களில் உள்ள கனரக இயந்திரங்கள், உபகரணங்கள் முதலியவற்றில் நாற்பது சதம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியானவை! பத்தாயிரத்துக்கு அதிகமான புத்தகங்களுடன் அருமையான நூலகம் வேறு!

இந்து, கிறிஸ்துவ, முஸ்லிம் மாணவர்கள் படிப்பதால் மூன்று பிரிவினரது விசேஷ நாட்களிலும் நிர்வாகச் செலவிலேயே விழாக்கள் நடக்கும். ஏழை மாணவர்களுக்கு ஜாதி, மத, பேதமின்றிப் பல உதவிகள் செய்யப்படுகின்றன. எஸ். ஏ. ராஜாவின் இந்தப் பரந்த மனப்பான்மைதான், அவர் கிறிஸ்துவராக இருந்த போதிலும் வடக்கன்குளத்தைச் சுற்றியுள்ள பல கிராமங்களில் இந்து கோயில் திருவிழாக்களுக்குக் கூட அவரைத் தலைமை தாங்கும்படி அழைக்குமாறு மக்களைத் தூண்டுகிறது.

— கே. பகவதி பெருமாள் பிள்ளை

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 4 31543 4 34 157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 4 73389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)



## உங்கள் விழிகள் முன்னால் வண்ணங்கள் உயிர்பெற்று மலரும்

# ENFIELD

வண்ணம். ஆம், இது இயற்கை நமக்கு அளித்த ஒப்பற்ற பரிசுகளில் ஒன்று. வண்ணம்தான் இப்பரந்த உலகிற்கு ஒரு ஒப்பற்ற கவர்ச்சியையும் வசீகரத்தையும் அளித்துள்ளது. வண்ணம் இல்லையெனில், கேளிக்கைகள் சோபை இழந்து போகும். வண்ணம் இதை முழுமையாக அறிந்துள்ளது என்ஃபீல்ட் (Enfield)

உதாரணமாக என்ஃபீல்ட் 203R டிவியை எடுத்துக் கொள்ளுங்கள். வியக்கத்தக்க சிறப்பு அம்சங்களுடன் ஜப்பானிலிருந்து உங்களுக்காக தருவிக்கப்பட்ட டி.வி. அதை இயக்குங்கள் தனித்தன்மை வாய்ந்த "பர்ஸ்ட் கிளீனிங் சர்க்யூட்" (Burst Cleaning Circuit) அதி நேர்த்தியான வண்ணங்களுக்கு வழி வகுக்கிறது. "யூனிகலர் சர்க்யூட்" (Unicolour Circuit) அமைப்பு தானாகவே வண்ண வேறுபாடுகளை அவ்வப்போது சரிசெய்து, எப்போதும் சரியான கண்குளிர் வண்ணங்களைத் தருகிறது. "வோல்டேஜ் சிந்தசைசர்" (Voltage Svnthesizer) எல்லா சமயத்திலும் படங்கள் மிகத் துல்லியமாக வருவதற்குத் தொடர்ந்து செயல்படுகிறது. இவை மட்டுமல்ல இதன் சிறப்புகள், பலவிதப் பணிகளைச் செய்யும் "ரிமோட் கண்ட்ரோல்" (Remote Control), ஒலி அளவு, சானல், வண்ணம் ஆகியவற்றை பற்றிய தகவல்களைத் திரையில் பளிச்சிடும் அமைப்பு. என்ஃபீல்ட் 203R டிவியின் சீரிய அம்சங்களின் பட்டியலுக்கு முடிவே கிடையாது!

உயர்நுட்பத்தின் அடிப்படையில், வண்ணங்களைப் பற்றி முற்றுமாக அறிந்திருப்பதால் மற்றொரு உன்னத டிவியையும் அளிக்கிறோம். என்ஃஃபீல்ட் 200E. எகானமி (Economy) டிவி ஆகிய இது எகானமி என்ன என்பதற்கு இது ஒரு புதிய விளக்கம் அளிக்கிறது.

நீங்கள் கலர் டிவி வாங்க தற்சமயம் தயாராக இல்லையென்றால் பரவாயில்லை. மனம் தளரவேண்டாம். என்ஃபீல்ட் டிவிகளுக்கு உரித்தான உயர்ந்த தரமும், படச் சிறப்பும் கொண்ட கறுப்பு-வெள்ளை டிவிகளையும் அளிக்கிறோம். மூன்று மாடல்களில் இவை உண்டு. 14" "போர்ட்டபிள்" (Portable), 20" 'ஹாரிஸாண்டல்' மாடல் (ஷட்டர்களுடனோ அல்லது இல்லாமலோ) மற்றும் இன்றைய நவீன போக்குகளுக்கு ஏற்ப 20" வெர்ட்டிகல் (Vertical) மாடல்

ஆகவே, எந்த டிவியை வாங்குவது என்று முடிவெடுப்பதற்கு முன்பு வண்ணங்கள் உயிர் பெற்று மலர்ந்து வருவதைக் கவனியுங்கள். உங்கள் மனது சரியாக முடிவு எடுக்க உங்கள் கண்கள் வழி காட்டட்டும்.





# என்ஃபீல்ட் டிவி

கலர் &
கறுப்பு-வெள்ளை

**ஒருமுறைப் பார்த்துவிட்டால், வேறு எதையும் விரும்பமாட்டீர்கள்**

● சென்னை, மதுரை, கோயம்புத்தூர், சேலம், திருச்சி, வேலூர், ஆற்காடு, மற்றும் ராணிப்பேட்டையில் மட்டுமே கிடைக்கிறது.

Mudra: M : EEL : 038 Tam

மீண்டும் பார்க்கத் தூண்டும் ஜொலிப்பு...
மின்னலடிக்குது ஸூப்பர் ரின் வெளுப்பு.

250 கிராம்
வாங்கக் கிடைக்கிறது.

SUPER
RIN
STRIKES WHITER

**மின்னலடிக்கும் ஸூப்பர் ரின்— அதி வெண்மை.**

இதோ டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

LINTAS RIN 115 2416 TM